# பொருளடக்கம்.



# உரிமையுரை.



சேந்தமிழ்ப் பாவலீர்!

அமிழ்தினுமினிய அருந்தமிழ்ப் பாநலஞ்சுவைத்துத் தேக்கெறிந்து இன்பநுகர்ச்சியில் இனிது வீற்றிருக்கும் நுமக்கு அன்பு பற்றி யாமிடும் இப்பாவிருந்தின்கட் குறைபாடு ஏதேனும் நிகழ்ந்திடுமாயினும் அதுகொண்டு எம்மை யெள்ளலிர் ஏற்றுக்கொண்மின்.

உள்ளவாறே நீவிர் இம்முதனாள் விருந்தில் இன்சுவை காண்டிராயின் இன்னுஞ் சின்னாள் விருந்திடப் புகுதும். அன்றி இம்முதனாள் விருந்தே புன்சுவைத்தாய்ப் போயிற்றேல் யாம் வாய்வாளாமை மேற்கொண்டு அமைதல் ஒருதலை.

இங்ஙனம்,

நூலாசிரியர்.

# முகவுரை.



பாவலர் விருந்தெனும் இந்நூலின்கண் அடங்கிய செய்யுட்களுட் பெரும்பாலன முன்னரே புத்தக ரூபமாகத் தனித்தும் பத்திரிகைகளிலே விடய ரூபமாக ஏனையவற்றொடு சேர்ந்தும் வெளிப்பட்டிருக்கின்றன. அவை யனைத்தையும் ஒருங்குசேர்த்துத் தொகுத்து அச்சிட விரும்பினேமை எமது நண்பரும் மாணாக்கரும் அவ்வாறே தூண்டினமையின் இதனை வெளிப்படுத்துவே மாயினேம்.

இதன்கண் அடங்கியவற்றுட் 'பட்டினக் காட்சி', மதுரைமாநகர்', 'போலியாராய்ச்சியன்', 'ஓர் ஐயப்பாடு' என்னும் இந்நான்கும் முன்னர் ஒருபோழ்தத்தும் வெளிப்படாதன. அவை இப்பொழுதுதாம் முதன் முறையாக வெளிப்படுகின்றன. 'கடற்கரையுலா', 'தாமரைத்தடம்', 'கலங்கரை விளக்கம்' என்னும் இம்மூன்றும் ஞானபோதினி யென்றதோர் மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகையின் வாயிலாக வெளிப்போந்தன.

இவையிற்றைத் தொகுக்கும்வழி உடனின்றுதவிய எமது இயற்றமிழ் மாணவரது நன்றியறிவு ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

ஒன்றுக்கும் பற்றாத சிறியேமை இந்நன்முயற்சியின்கண் ஏவித் தோன்றாத்துணையா யருகிருந்து உதவிய எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாய நடராசப் பெருமானை மனமொழி மெய்களிற் றொழுகின்றனம்.

பிலவ௵ ஆனித்திங்கள்,
சென்னை.

வி. கோ. சூ.

I.

## மணியசிவனார் கலிவெண்பா.



[திருவையாற்றிற்கடுத்த மாங்குடியென்னுஞ் சிற்றூரிற் றோன்றியவரும், தமது தந்தையார்க்கு வாய்த்த ஞான குரவரும், சிவாநுபூதிச் செல்வருமாய் விளங்கிய ஸ்ரீசுப்பிரமணியசிவனார்மீது 1894-ஆம் வருஷம் தாம் தமது தாயாரோடும் மகா சிவாத்திரிரிநிமித்தம் சீகாளத்தி நகாஞ் சென்றுழிப் பாடியது.]

# மணியசிவனார் கலிவெண்பா.

## காப்பு.

நேரிசை வெண்பா.

சீமான் மணிய சிவன்றனக்கு நற்கலிவெண்
பாமாலை யாகும் பணியியற்ற—நாமாதுங்
கற்பகலா வள்ளி கணவனுமன் னான்றமையன்
கற்பகமால் யானையுமே காப்பு.

---

## ஞானகுரு வணக்கம்.

குறள் வெண்பா.

எந்தைகோ விந்தசிவ னெங்குரவ னார்கழலெஞ்
சிந்தைகூர் பேரணியாஞ் சீர்த்து.

---

## ஆக்கியோன் பெயர்.

குறள் வெண்பா.

சூரியநா ராயணவேள் சொல்கலிவெண் பாவைநவல்
பேரிய லைந்தும் பெறும்.

## நூல்.

கலி வெண்பா.

பூமணக்குங் கூந்தற் பொறிமணக்கு நான்முகன்ற
னாமணக்கு மான்மணக்கு நல்லூராங்—காமணக்கு

மாங்குடியிற் சற்குருவை வாழெந்தை சீர்தூய
மாங்கமலத் துற்ற வாசனத்தைப்—பாங்குடனே

சுத்தமகா சைவபதந் துன்னுபரஞ் சோதியினை (டு
யத்துவித மாயொளிரு மான்மாவைச்—சித்தரெலாங்

தன்பாதத் தேவீழ்ந்து சத்தேயெஞ் சித்தேந
லின்பே யெமையாள்வ தென்றேவென்—றன்பாற்

றுதிசெய்யக் கேட்டுவந்து தூயசிவ தீட்சைக்
கதியையவர் கட்கருளுங் கல்லாற்—பதியைச்சன் (ய

மார்க்க வழியொழுகிக் காட்டி வணங்கலரை
வேர்க்கா தவர்பால் விருப்பினனை—யார்க்குமருங்

கத்தனைக்கொம் புத்தேனைக் காமாதி யாறனையுஞ்
சித்தமுட னேயரிந்த செல்வனைப்—பத்தியுட

னெஞ்ஞான்று முப்பத் திரண்டறமுஞ் செய்தோனை (மரு
யிஞ்ஞாலத் துள்ளா ரெவரெவர்க்கு—மஞ்ஞான

வையந் திரிபொழித்த வான்றோனைப் பாவங்க
ளையும் படிக்கு நயந்துவந்த—வையனைப்பே

ரானந்த மான வரும்பொருளை யற்புதநற்
கான ரசிகனைச்சிற் கந்தவே—டானே (உ

யவதரித்தா னென்றே யனைவோரு மேத்த
வவனியினுட் போந்த வமுதை—நவமான

தக்கிணா மூர்த்தியைச் சாமமுதல் வேதமெலா
மொக்கவே யோதா துணர்ந்தானைத்—தக்கமுறை

யின்னில் லறத்தை யினிது நடாத்தியதிற் (உ
றன்னிகரி லாத தனிவேளை—மன்னியவி

பூதியோ டக்கும் புனைந்ததிரு மேனியநு
பூதிமா னைப்பல் புகழ்படைத்த—வேதியனை

மட்டார் குழன்மடவார் மாலிருளிற் சேராமற்
பட்டாங்கிற் சொற்ற படியாக—வட்டாங்க (நப

யோகம் பயின்றனை யுத்திபுத்தி மானையென்றும்
போகத் திருந்தானைப் புண்ணியனை—வாகாக

மும்மலநீங் கப்பதியோ டொன்று முதிர்பசுவைக்
கைம்மலரிற் சிற்குறியிற் காட்டியவெஞ்—செம்மறனைச்

சிந்தா மணியைச் சிவக்கொழுந்தைச் சின்மயத்தைக் ()
கந்தூக்க மாகவன்பு கட்டுதற்கு—நந்தாத

சங்கிலியெ முள்ளத் தடங்கூடத் திற்கருணைப்
பொங்குமதந் தன்னைப் பொழிகின்ற—செங்களிற்றை

யெத்திக்குஞ் சீரா ரிறையோனைச் சிந்திக்கத்
தித்திக்குந் தன்மையுள செங்கரும்பை—முத்திக்கு (சம)

மூலத்தைக் கல்வி முதல்வனைமெய் காத்தானைக்
காலங் கடந்த கடவுளைப்பே—ரோலமிட்டுத்

தூதருட னேவருங்கா லற்செருக்குஞ் சூலத்தைப்
பாதம் பணிந்தார் பரமசுக—தாதைதனை

யெங்கு நிறைந்தானை யேகாந்த மானானைத் (சரு)
துங்கமறை யெல்லாந் தொகுத்துத்தன்—மங்காப்

பிரசங்கத் தின்முகமாய்ப் பேசுபெரி யோனை
யரசங்கம் யாவு மடைந்த—குரிசிறனை

வேதாந்த வீசுரனை வெள்ளிமலை யுள்ளானை
நாதாந்த முங்கடந்த நாயகனைப்—போதாந்தத் (ருய)

துட்பொதிந்த வொன்றை யுரைப்பரிய வுண்மையையெந்
நட்பாள னாகி நனிவிரைந்து—பெட்புடன்வந்

தாண்டானைப் பத்த ரனைவோ ரினுமிகவு
மாண்டானைக் கல்யாண வள்ளறனைத்—தூண்டா

மலையிலிட்டுக் காற்றசையா மாவிளக்கை யாரும் (ருரு)
விலைமதியா ரத்தினத்தை மேலாங்—கலைகனிந்த

சாற்றைப் பருகிட்ட சாம்பவனை நான்மறைமேல்
வீற்றிருக்குந் தேவை விமலமா—மூற்றை

விளங்குகரு ணைக்கடலை வித்தையெலாம் வைத்த
களஞ்சியத்தைப் பஞ்சாக் கரத்தைக்—களங்கபரி (௬ய)

பாகமொடு சத்தினி பாத மடைந்தவருக்
கோகையொடு சொல்லு மொருவனைச்—சீகண்ட

மாதியாம் பாடியங்க ளோந்தன் பொருளுடனே
நீதிநூ லுட்கருத்து நேராக—மீதிவரச்

சீரா ருபநிடதஞ் செவ்வியசி வாகமங்க (௬ரு)
ளோரார் புராண மிவையிற்றின்—சாரமுஞ்சேர்த்

தாக்கிய பஞ்சா மிருதவித்தி யாவிருத்தி
தேக்கியவன் புள்ளவராஞ் சீடர்செவி—வாக்கியான்

மேதகுமே தாவியாம் வித்தகனை விப்பிரனைக்
கீதாசஞ் சேர்ந்த கிளவியனை—வாதமெனுங் (எய)

காட்டினிலே வந்து கலக்கி யுழல்கின்ற
கோட்டமா வாண்கட்கோர் கோளரியை—வீட்டுநெறிக்

குற்ற வொருதுணையை யுத்தமனை மாயைவலி
செற்றவனைச் சாலச் சிறந்தானை—நற்றவனை

மன்னவனை மாசீனி வாசற்கு வாய்த்தசிவ (எரு)
சின்னந் தரித்திலங்குஞ் சிற்சொருபந்—தன்னைச்

சுயம்பிரகா சத்தைச் சொலற்கரிய தாகி
வயங்கும் பெருவெளியை வாடி—யுயங்குயிர்கள்

வந்துவிடாய் தீருதற்கு வாய்த்ததொரு வாவியினைக்
கந்தங் கமழ்ந்து கலக்கமின்றி—நந்துதவ (அய)

மூந்தடமாய்ச் சுப்ரமண்ய சாத்திரியா ருள்ளத்தை
யுந்துகளிப் பிற்கொண் டுறுதுணையோ—டுந்தினமு

மேலாஞ் சலக்ரீடை செய்து விளையாடும்
பாலசுகு மாரனைப் பண்ணவனைச்—சீலமுறுங்

தன்னை யறிந்தானைத் தற்சொரூப மானானைப் (௪௫)
பொன்னின்பற் றற்ற புரவலனை—பின்னல்புரி

மண்ணாசை நீத்த மகானை யவிச்சைசயது
நண்ணாத மேலோனை நங்களிக்கு—விண்ணாட

ரேத்திக் தனக்குநிக ரில்லாத் தலைவனையெ
மாத்தனைச்சாட் சாற்கார மானானைச்—சோத்தம்யாந் ( )

செய்யுளாற் செய்வான் றிருவருள்பு ரிந்தானை
வையம் வணங்கும் வடி வழகு—மெய்யனைத்தன்

காதலிச்சு நல்ல கலைவலைத்தி கந்தமுற்ற
சீதளமு காரவிந்தச் சீரோனைச்—சாதல்பிறப்

பென்னுஞ் சமுத்திரங்க டம்மை யெளிதாக (௫௫)
முன்னர்க் கடந்தானை முத்தமிழாங்—கன்னற்சா

றுண்டு களித்தானை யோதரிய வாணிமுத்தைப்
பண்டிசந்தி யாசியர்தன் பாதங்கள்—கண்டு

பகர்வரிய பூசைபல பண்ணை மகிழ்ந்து
சுகவழியின் சூக்குமத்தைச் சொன்ன—பகவனைப்போய்ச்

சார்ந்தவிட மெல்லாஞ் சவாது மணப்பானை
யார்ந்தவிட மெல்லா மருள்பதித்துச்—சேர்ந்தவிட

மெல்லாஞ் சிவமதமா யேறத்தா பித்தானைப்
பல்லா யிரதேவர் பாடலுறும்—வல்லானை

மாமதுரை வந்து மனிதர் மனத்திருக்கைப் (௬௦)
போய்மடியச் செய்த புனிதனைநற்—றூமதுரை

யான தயாபரனை யாதார மாறனையு
மோனமாச் சென்று முதிர்பிரம—வானந்த

ரந்திரத்திற் சேர்ந்தவெங்கள் ரட்சகனை யஞ்செழுத்து
மந்திரத்தை யெங்கனவில் வந்துரைத்த—சுந்தரனைக் ()

கொள்ளைப் பிறப்பறுக்க வந்ததொரு கோமளத்தைக்
கள்ளப் புலக்களைகள் கட்டானை—விள்ளரிய

வாறெழுத்தை யெம்மனச்செ யன்பான் விதைத்தானை
மாறில் குணக்குன்றை மாமோக்கப்—பேறுதரு

மந்தகா சஞ்செய் மகாப்பிரபு வாணனை (கசரு)
விந்தையனை யெந்தமக்கு மேம்பாடு—தந்தவனை

வைகைப் புளினத் திருந்துழி வந்தெதிர்த்துக்
கைகலந்தோர் விண்ணேறக் காட்டுமருட்—செய்கையனைத்

தேடரும்பே ரின்பச் செழுங்கதிர்கால் சோழவள
நாடதனி லேயுதித்த ஞாயிற்றைச்—சீடர்மனச் (கஉ0)

செங்குமுதங் கண்மலராத் தோன்றுஞ் சிவயோகத்
திங்களினைச் சித்தாந்த தீபத்தை—நங்கண்

மணியைநல்ல மெய்ஞ்ஞான மாமுகிலைச் சுப்ர
மணியசிவன் றன்னைநெஞ்சே வாழ்த்து.

II.

## அவயவ வறிக்கை.



[முன்னர்க்கூறிய ஸ்ரீமணிய சிவஞாநது மாணாக்கருட் சிலர்மீது, தாம் 1894-ஆம் வருஷம் மதுரைமாநகரஞ் சென்றுழி, அன்னாது சிவபத்திச் செயல்களிலீடுபட் டுத் தம் அவயவங்களை முன்னிலைப்படுத்திப் பாடியது.]

# அவயவ வறிக்கை.

## காப்பு.

### வஞ்சித்துறை.

சிவகண பதிதா
னவயவ வறிக்கைக்
குவகையொ டுதவுங்
கவலலென் மனனே?

### நேரிசையாசிரியப்பா.

திருவளர் செல்வப் பாண்டிய நாட்டின்
மருவளர் சோலை மாண்புறப் புடைசூழ்
மதுரைப் பதிதனில் வந்தவ தரித்த
மதுர வாசக வள்ள லாரை
யன்பே யுருவா யமர்ந்த குரவரை (௫)
மன்பே ருலகில் வளர்புக ழாளரைப்
பத்தி நிரம்பிய பாசு பதரை
வித்தை நிரம்பிய வேதம்வல் லோரை
யாகம முணர்ந்த வறிஞரைச் சந்திர
சேகர மூர்த்திதா டினம்பணி யுநரை (௧௦)
யேக லிங்க சிவார்ச்சனஞ் செய்து
மாகே சுரனருண் மகிமையுற் றோரை
மாங்குடி மணிய சிவஞ ரிடத்துப்
பாங்குடன் சைவ தீட்சைபெற் றோரை
நல்லற மியற்றிய ஞானதே சிகரை (௧௫)
யில்லற மியல்வழா திருந்த புலவரைப்
பண்புடை யாளரைப் பரம சிவன்பேர்

மொழிந்து சஞ்சித மொழிந்த தூயரைப்
பதியைப் புல்லிப் பாசவேர் கல்லி
விதியை வென்ற வீரரை யஞ்செழுத் (உ0)
தெண்ணி யின்ப நண்ணுநா வலரை
வேணி லானுடை வீறடக் கியமா
சீனி வாச சிவனுநல் யோகம்
பயின்றகோ விந்த பரமா சிரியனு
மயின்று நஞ்சைக் கண்டங் கறுத்தா (உரு)
னடிமலர்த் தரிசன மநுதினஞ் செய்யுஞ்
சுப்பிர மணிய சிவனு மாகிய
சுத்தாத் துவிதச் சூக்குமந் தெரித்த
வத்தர் மூவரை யகமே நினையாய்
கண்ணே யவருடை யுருவங் காணாய் (௩0)
செவியே யவரது சிறப்பினைக் கேளாய்
நாசியே யவர்நா டொறுமருச் சிக்கும்
வாசனை வீசு மலர்களை முகவாய்
வாயே யவர்தம பாதம் வழுத்தாய்
மெய்யே வணங்காய் கையே கூம்பாய் (௩ரு)
தலையே பணியாய் சாற்றினே
மலையா திருத்திரெ மவயவங் காளே!

# III.

## கையறுநிலை.



[1892–ஆம் வருஷம் முதல் 1901–ஆம் வருஷத்திற்குள் தம் அன்பிற்கு இடனாயிருந்து இவ்வுலக வாழ்வினை நீத்துச் சென்ற சிலர்மீது, தாம் செயலற்றுநின்ற நிலையைப்புனைந்து காஞ்சித்திணையிற் பொதுவியற்பாலதாங் கையறுநிலைத்துறையின்க ணமைத்துப் பாடியது.]

# கையறுநிலை.

## I.

[ஆங்கில பாஷையில் மகா கவியெனப் பெயர்பெற்று விளங்கிய தெனிசன் பிரபு 1892-ஆம் வருஷம் இறந்தபின் அவர் நூல்களி லீடுபட்ட தாம் ஆற்றாது பாடியது.]

கலிவிருத்தம்.

ஆங்கில மாதரா ளழகு குன்றுவா
ளேங்குவா ளென்செய்வா ளின்ப மீந்ததன்
மாங்குயிற் கிளவிசேர் மன்ன னாகிய
வோங்குசீர்த் தெனிசனை யொழிந்த பான்மையால். (

தத்துவ சாத்திரத் தனித்த ருக்கனை
கொத்தொடு தோன்றிய குணஞ்சி றந்துள
வித்தைசேர் பெயின்ஸ்பென்சர் மில்லெ னும்பழச்
சத்தினைக் கவிக்கலந் தந்த வள்ளலே! (௨)

மல்லிகை நுகர்தொறும் வாசங் குன்றல்போ
லில்லையே நின்கவி யினிமை யானது
மெல்லென நினைதொறும் மேன்மை காட்டலாற்
சொல்லுதற் குவமையொன் றேனுந் தோன்றின்றால். ( )

திப்பியப் புலவனே தெனிச வள்ளலே
யொப்புயர் வற்றநி னுசித கேயத்தின்
றுப்பினைச் சொற்றொறுஞ் சொரிசு கத்தினைச்
செப்பிநிம் வலிபெற டாண்டுச் செல்லுகேம்? (௪)

ஐயனே யாங்கிலத் தற்பு தப்பெருஞ்
செய்யநற் பாடல்கள் செய்த செம்மலே
ஐயகோ தேனிசனே யணிகொள் பூவனாய்
நையுபு செம்மலாய் நண்ணிற் றேநின்மெய்? (ரு)

நீயிறந் தாங்கில நிகரி னாட்டினை
வாய்விடுத் தழுதலாம் வருத்த மெய்துவித்
தாயிரங் காதத்திற் கப்பு றத்தினிற்
சேயவெம் மையுந்துயர் செய்தல் சாலுமோ? (சு)

வெல்லுதற் கரியனே விளங்கு சீர்த்திசால்
செல்வனே தேனிசநின் செய்யுட் கட்படுஞ்
சொல்லினும் பொருளினுந் தோன்று கின்றசீர்
வல்லமை காண்பினி யாவர் மாட்டினே? (எ)

சாதுவா மார்தரின் றனிநற் காதையு
மேதமி லினிமையா ரின்மெ மோரிய
மாதரம் பாக்களு மனத்திற் கொண்டியா
மாதரத் தோடுமா னந்த மார்துமே. (அ)

இனிமைசேர் செகப்பிரிய ரென்ற மாகவி
மனிதரி னியற்கையை வகுத்துக் காட்டல்போற்
குனிவிலா மானுட குணவி சேடஞ்சொ
னினபனு வலின்றிற னிகழ்த்த வல்லெமோ? (கூ)

ஒழுகுதே னிசையனு யொளிர்ந்து நின்றநிற்
கழகொடு வாய்மையு மமைந்த பண்பினால்
விழைவொடு தேனிசப்பேர் விளம்பி னார்கொலோ
கழறுநின் னிசையெங்கும் கவின்று பொங்குமால். (ய)

பாமர பண்டிதர் பயன்கொள் பாக்கிசைத்
தோமறு பாப்பல சொற்ற பாவலோய்
நாமகள் கூத்தயர் நாவி னோய்நின்றன்
காமர்செங் கவித்தடங் களிப்பி னாடுகேம். (யக)

# II.

[தம்மிடங் கல்வி பயிலும் இயற்றமிழ்மாணவரு ளொரு வராயிருந்தவரும், திருவெவ்வுளூர் இராமசாமிச் செட்டியாரவர் கள் குமாரரும், 1900–ஆம் வருஷத்துச் சென்னைச் சர்வகலா சாலைப் பிரதம கலா பரீட்சைப் பாடமாயிருந்த சரசாங்கி நாடகமுடையாருமாகிய திரு. சலசலோசனச் செட்டியார் 1897–ஆம் வருஷம் இறந்துழிப் பிரிவாற்றாது பாடியது.]

ஒரோவோரடிமிக்கு வேறுபடவந்த கொச்சக வொருபோகு.

பொன்மலருங் கொன்றைப் புனிதமுடி யைங்கரன்பேற்
சொன்மலருஞ் செந்தமிழிற் றூயபதி கம்புகன்று
தென்மலருஞ் சாவித் திரிசரிதை செய்தோனே
கன்மவசத் தானோ கடிதிற் பிரிந்தனையே!
கஞ்சமலர்க் கண்ணா கடிதிற் பிரிந்தனையே!! (௧)

பேணிமுகில் போல்வார்சொற் பெற்றுவக்குஞ் சாதகமே
யாணர்தா ணண்மலரி னின்றே னுணுஞ்சுரும்பே
மாணெழில்சேர்ந் தோங்கு மதியே யியற்றமிழின்
மாணவர்தங் கண்ணே மறந்தெங்ங னேகினையோ!
மாமுளரிக் கண்ணா மறந்தெங்ங னேகினையோ!! (௨)

மாற்றாரை யஞ்சாது வாதப்போர் வென்றவனே
தேற்றார் தமைத்தெருட்டுஞ் செஞ்சலச லோசனசொல்
லூற்றே குளந்தைநக ரூற்றுழியெந் தம்பிரிவை
யாற்றா துரைத்தவெண்பா வம்மா வயர்க்கிலமே!
ஐயனே யிஞ்ஞான்று மம்மா வயர்க்கிலமே!! (௩)

குற்றமிலாத் தாதைமக வென்றோர்தங் கோண்மறுத்துக்
கற்றகலைக் காதலனுங் காதலியு மாகுநிலை
மற்றறிந்த வாசானு மாணவனு மாமிவர்கட்
குற்ற வியைபென் றுரைத்தாயெங் குற்றனையோ!
உத்தமனே யெம்பாலன் புள்ளாயெங் குற்றனையோ!!

நாடகமாம் வண்கழனி நற்பயிர்செய் சொல்லுழவா
வோடிச் சரசாங்கி யுட்பயனைத் துய்க்கலைநீ
யாடகப்பொன் னம்பலத்து ளாடுநன்று ளண்மியின்ப
வீடுற்று யென்னே மிகவு மிறும்பூதே!
மென்கமலக் கண்ணு மிகவு மிறும்பூதே!! (ரு)

III.

[நமது தமிழ்நூற் போதகாசிரியரும், மதுரையம்பதி மகா வித்துவானுமாகிய சு. சபாபதி முதலியாரவர்கள் 1898-ஆம் வருஷம் தேகவியோகமாயின ஞான்று, அவரது பிரிவாற்றும விரங்கிப் பாடியது.]

ஏரோவோரடிமிக்கு வேறுபடவந்த கொச்சக வொருபோகு.

சொல்வளருஞ் செய்யதமிழ்த் தொல்கடலி னூடோறுஞ்
செல்வனைத லென்னத் திளைத்தா டிருங்களிறே
கல்வளரெந் நெஞ்சங் கவினரங்க மாநடிப்போய்
பல்வளனுஞ் சான்றோய் பரலோக முற்றனையோ!
பண்ணவர்கள் வாழும் பரலோக முற்றனையோ!! (க)

கொந்தார் நறிய குவளைமலர்த் தாருடையோய்
சிந்தா மணியே சிவஞான நற்செல்வா
வந்தோவெ மன்புடைய வண்ணு லரும்புலவா
மந்தா கினியணிந்தான் மால்வரைக்க ணெய்தினையோ!
மன்னே சபாபதியே மால்வரைக்க ணெய்தினையோ!!()

ஐயமெனுங் காடுமடுத் தன்பி னெரித்தொளிர்ந்த
செய்ய சுடர்ப்பிழம்பே தீந்தமிழின் றுதாவே
துய்ய குணக்குன்றே தோமில் சபாபதியே
மையமருங் கண்டனூர் மானுலக மேவினையோ!
வானோர் தவப்பயனுன் மானுலக மேவினையோ!! (௩)

கற்பனைச்செந் தேன்பிலிற்றுங் கான்செறிந்த தாமரையே
சொற்பொருளை நாடுந் தொழிலாளர்க் கெந்நாளுங்
கற்பகமா நின்றவனே காதற் குருமணியே
பற்பர் செறியுலக மாகாதென் றேகினையோ!
அண்ணால் சபாபதியே யாகாதென் றேகினையோ!! ( )

பைவரவின் பங்கனொன்றுப் பாவித்த தேசிகனே
சைவ சிகாமணியே தண்டமிழ்ப்பைங் கொண்டலே
யுய்வழியிஃ தென்றறியா தோடி யுயங்குநர்க்கு
மெய்வழியைக் காட்டியநீ விட்டொளித்த தெவ்விடமோ!
வேறு பெயமைவிடுத்து விட்டொளித்த தெவ்விடமோ!!

சங்கத்துச் செய்புலனுந் தண்கடலி னீர்முகந்தே
மங்கலங்க டாம்பாட மாணுக்க ருட்பொழியுந்
துங்க முகிலே துசமர் சபாபதியே
யெங்கள் குருமணியே யெங்கு னகன்றனையோ!
இன்றமிழிற் கூங்குயிலே யெங்கு னகன்றனையோ!! ( )

வாதமெனும் போராங்கின் வந்து மனமகிழ்ந்து
போதமொன்றத் தாளினிற்பல் போரின் சதிகாட்டிப்
பேதவறை கூவிப் பெரும்போர் தனில்வென்ற
தீதொழிந்த நாச்சிலையோய் சென்றதுநீ யெவ்விடமோ!
சித்தாந்த நூல்வல்லோய் சென்றதுநீ யெவ்விடமோ!!

தென்பாங்குன் றத்துறையுஞ் செவ்வேண்மே லந்தாதி
பன்பி னியமகமா வாற்றித் திருக்குளந்தை
மன்புடைப்பிள் ளைத்தமிழை மாண வியற்றியவா
வின்ப வடிவுடைய வீசுரன்று ளண்மினையோ!
எம்மைத் தெருட்டியவா வீசுரன்று ளண்மினையோ!!

மாமதுரைப் பெம்மான்மேன் மாலையெனப் போர்புனைந்து
காமர் சிலேடைவெண்பாக் கட்டுரைத்த பாவலனே
பாமணமார் கோவேநீ பாரினைவிட் டேகியது
தாமதுரை சாமி தமியேஞ்செய் தீவினையோ!
தாதாய் குருவே தமியேஞ்செய் தீவினையோ!! (௯)

ஆங்கிலகீர் வாண வருமொழிக டாம்பயின்றோய்
தாங்கு கணிதம்வல தார்க்கிகர்தங் கோமானே
பாங்கு பெறுகமகா பாவலர்தம் போரேறே
வாங்குபுகழ்க் கூடன் மதியில்விசும் பாயிற்றே!
மாண்புறுநீ யின்றி மதியில்விசும் பாயிற்றே!! (௧௦)

ஐயோ தமிழ்மொழியே யையோ தமிழ்நாடே
யையோ மதுரை யருநகரே யெம்முடைய
வையன் சபாபதியை யன்னோ விழந்தமையாற்
றுய்ய மதியிழந்த தூலவுடம் பாயினிரே!
சோகத் துகின்மறைத்துத் தூலவுடம் பாயினிரே!! ()

இம்மை மறுமையினு மெஞ்ஞான்று மாணாக்கர்
தம்மனத்து வீற்றிருக்குஞ் சாதுக்கள் கோமானின்
செம்மை வினாக்கட்குச் சிற்சிலவா லெவ்விடைகேட்
டெம்மைத் தழீஇயவுனை யெவ்வுலகிற் காண்குதுமோ!
எங்கள் சபாபதியே யெவ்வுலகிற் காண்குதுமோ!! ()

IV.

[நமக்கு நண்பரும் பேராதரவாயிருந்தவருமாகிய வித்து வான் யாழ்ப்பாணம் ராவ் பகதூர், சி. வை. தாமோதரம்பிள்ளை யவர்கள் இருபதாம் நூற்றாண்டு பிறந்த வற்றைஞான்று தேக வியோகமாயினமையின் அவர்தம் பிரிவாற்றாது பாடியது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னவிருஞ் செய்யநறுந் தமிழுலகிற் புலவரெலாம்
புதுநாற் றுண்டு
துன்னியது கண்டுகொண்ட மகிழ்வனைத்துந் தொலைதரநந்
தூய்மை சான்று
பன்னரிய நகர்நடுவட் பழுத்ததொரு பயன்மரந்தான்
பறிப்புண் டாங்கே
தன்னிலையின் வீழ்ந்ததெனத் தாமோத ரக்குரிசில்
சாய்ந்தா னந்தோ! (௧)

புலமையெனு நீர்நிறைந்த ஆருணியின் கரையுடைந்து
போயிற் றென்னக்
கலைமதியங் காரிருளைக் கடியாது விசும்பினின்றுங்
கரந்த தென்ன
விலகினிய விசையெழுப்பும் யாழினுறு நரம்பிடையி
னிற்ற தென்னச்
சிலையினிரு ணற்றதெனத் தாமோத ரக்குரிசில்
சென்று னந்தோ! (௨)

செந்தமிழ்ப்பா வலர்களெனும் பயிர்வாடச் சிறப்புமிகு
சென்னை யின்கண்
விந்தைநலச் சாலைதன துறுப்பிழப்ப மாணுக்கர்
மிகவ ருந்தச்
சந்தமலைத் தமிழணங்குந் தலைகுனிய வீழமுகர்
தான்க விழ்ப்ப
நந்துபுகழ்த் தாமோத ரக்குரிசில் சிவலோக
நண்ணி னானால். (௩)

தரவுகொச்சகக்கலிப்பா.

காமோதி வண்டர் கடிமலர்த்தேன் கூட்டுதல்போ
லாமோது செந்தமிழி னன்னூல் பலதொகுத்த
தாமோ தரம்பிள்ளை சால்பெடுத்துச் சாற்றவெவர்
தாமோ தரமுடையார் தண்டமிழ்ச்செந் நாப்புலவீர்?

[தமக்கு நண்பராயிருந்து சுவாநுபூதிப் பெருவாழ்வுற்ற வை. இரத்தின செட்டியாரவர்கள் விதேகமுத்தி யெய்திய வழிப் பாடியது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வணிகர்திருக் குலத்தினவ தரித்தவர்த மாபொளிர
வயங்கா நின்ற
மணியனைய நினக்குறுபே ரிரத்தினமென் றிட்டழைத்து
வழங்கி னாரோ
வணியர்பலர் வேதாந்தம் வல்லுநர்நிற் சூழ்தரநீ
யன்னார் நாப்ப
ணணிவிளங்கி யிருந்தபெரும் பரிசினைதி ரதுபோற்றி
நல்கி னாரோ? (க)

எத்தொழிலை மேற்கொளினு மதுகடமை யெனக்கருதி
யியற்று கிற்போ
யத்துவித மெனுங்கடலிற் றிளைந்தவெந்த மருங்களிறே
யமைந்த சாந்த
வித்தகனே தமிழுலகில் வேதாந்த நூற்கதிர்கள்
வீசு மென்றா
ழொத்தவனே யநுபூதிப் பெருவாழ்வின் குற்றவனே
யொளித்த லென்னே! (உ)

கன்மவய மின்பதுன்ப மென்றவனை யவையிற்றாற்
கலங்க லின்றி
யின்மனத்தி னிருந்தவனே யிரத்தினப்பே ரிருந்தவனே
யெவ்வெ வர்க்கு
நன்மகிழ்வி னுரைவழங்கு நட்பாளா சுரியாப்புன்
னகைமு கத்தாய்
நின்மலச்செம் பொருளாக நீமிளிர்ந்த பரிசெடுத்து
நிகழ்த்தற் பாற்றே? (ந)

## VI.

[இந்திய சக்கிரவர்த்தினியாரும் ஆங்கிலநாட்டின் அரசியாருமாகிய மாட்சிமைதங்கிய **விக்டோரியா மகாராணியாரவர்கள்** காலஞ்சென்றமை கேட்டு இரங்கிப் பாடியது.]

### கலிவிருத்தம்.

ஈங்குற மிந்தியர்க் கியைந்த வாறெலாம்
பாங்குற நலம்பல பரிந்து செய்தவ
ளாங்கில நாட்டினல் லரசி யாகிய
வோங்கொளி விசயைத னுயிர்து றப்பதோ? (க)

நின்மலக் குணத்தின ணேய மிக்கவ
ணன்மையே விரதமா நயந்து நின்றவள்
புன்மையை நாடொறும் போக்கி யாண்டவள்
பன்மக்கார் துதிசெயப் பாரி னீங்கினள். (உ)

ஐயகோ வினியந மரசி போயினள்
செய்யகோல் செலுத்திய செல்வி போயினள்
வையகங் காத்தருண் மாது போயின
டுய்யவாழ் வுடையபைந் தோகை போயினள்! (௩)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொங்குபுகழ்விசயையெனுங்கோமாட்டி விண்ணுலகம்
புக்க போழ்து
தங்குமொளிப்பரிதிசென்று தண்கடலில் வீழ்ந்திட்டான்
றணந்த பாரின்
மங்கையுள ளைந்திருளின் படாம்போர்த்து வருந்தினண்
மயங்கிப் பின்ன
ரெங்குமுள வெவ்வுயிரு மரசிபிரி வாற்றும
விரங்கிற் றம்மா. (௪)

செம்மைநெறி திறம்பாது பல்லாண்டு தன்றலைவற்
சேர்ந்து வாழ்வா
டம்மையகஞ் சென்றவழித் தாயிறந்து போனதொரு
தகைமை மானப்
பொம்மலிளம் புலிமகளு நீயிறப்பக் கண்டுமனம்
புழுங்கு கின்றாள்
விம்முயிர்த்துத் தொழுகின்றா ளெழுகின்றா ளழுகின்றாள்
விழுகின் றாளே. (௬)

இவ்வுலகின் மகளிரது மேன்மையினை யியையவினி
தெடுத்து நாட்டிச்
செவ்விபெற வரசாண்ட விசயையெனுஞ் சீமாட்டி
தேவர் வாழு
மவ்வுலகின் கணுமன்னார் மேதகவை யன்பினெடுத்
தறைய மாறு
நவ்விவிழி மாதரசி விண்ணுலகிற் கெழுந்தருளி
நடந்தாய் போலும்.

பெண்ணெதற்கு முரியளல டன்வயமு முடையளலள்
பேதை யாவ
ணெண்ணியதன் றலைவனுக்குக் குற்றேவ லாட்டியென
நாளுந் தம்மு
ளெண்ணமிட்டுப் புன்மொழிகள் பலபிதற்றித் திரிதருஞ்
லெளியர் தேறும் [சில்
வண்ணமந்தப் போலிவசை மொழிபொய்ப்ப நீயாண்ட
மகிமை யென்னே! (௭)

மேற்படி—வேறு.

அரசற் குரிய மனையாட்டி
யரசி யாவண் மற்றொளிரு
மரசிக் குரிய தலைமகனோ
வரச னல்லன் மெய்யிதெனப்

பரசு நினது நாட்டுவிதி
பகரா நின்ற பரிசதனுன்
விரைசேர் குழலி னுர்பெருமை
மிகுதி யென்றல் போதருமால். (அ)

தரவுகொச்சகக்கலிப்பா.

தண்டாச் சிறப்புடைய தையானின் ஞெருகையிற்
கண்டாய் புதுமையெலாங் காரிகைமார் தந்தலையிற்
கொண்டாடு மாதே குவலயத்திற் பன்னலமு
முண்டாகும் வண்ண முவந்தருளி யாண்டனையே. (க)

பூண்டநின்கோ ணல்லசெயல் பொல்லார்க்குமாதலினுன்
வேண்டியவெச் செல்வமுநீ வேட்டபடி பெற்றனைமுன்
னுண்ட வரசரினு மம்மே நினக்குமிக
நீண்டபெரு வாழ்வினைநின் னேர்மையன்றோநல்கியதால்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நயமுறு மன்னே நின்னை
நாடெனு முடலி னுற்ற
வுயிரென மொழிகோ வன்றி
யொளியுடை விழியே யென்கோ
செயிரிலா வறிவே யென்கோ
செவ்விய மனனே யென்கோ
வயமுருக் கொண்ட தன்ன
வான்படைச் செல்வ மாதே! (கக)

## VII.

[தமக்கு நண்பரும்பேராதரவாயிருந்தவரும்சென்னை இராச தானிக் கலாசாலையில் வடமொழித் தலைமைப் புலமையும் பாஷைநூற்புலமையும் ஒருங்கே முறைபெற நடாத்தினவரு மாகிய தி. மி. **சேஷகிரி சாஸ்திரியாரவர்கள், எம்.ஏ.,** தேக வியோகமாயின ஞான்று அவர்தம் பிரிவாற்ருமையான் இரங் கிப்பாடியது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கல்வியினிற் சேடனையு நற்குணத்திற் குன்றினையுங்
　　கடுத்து நின்ற
செல்வமுறு கலைஞனிற்குச் சேடகிரிப் பெயரிட்ட
　　செம்மை நோக்கிப்
பல்விதத்துங் களிசிறந்தேம் பாரிடத்தி னின்சீர்த்தி
　　பரவல் கண்டே
மொல்வகையி னின்னன்புக் குரியேமாய் நாணாளு
　　முவவா நின்றேம். (௧)

எந்தமக்கோர் பற்றுக்கோ டெனவிருந்த மறையவனே
　　யெம்மி னீங்கி
விந்தையினும் விந்தையென மறைந்ததற்கோர் புதுப்பொ
　　வியப்ப நாட்டி [ருளும்
யந்தரர்கள் கைம்முகிழ்த்து நினையழைத்தா ராதலினு
　　னன்னார் மாட்டு
மந்தணகை புரிந்துமன மகிழ்ந்தும்ப ருலகுசென்ற
　　வகைமை யென்னே! (௨)

இவ்வாறி யாமன்றி யெம்போலு மேனையரு
　　மிருத்த றேர்ந்து
மெவ்வாறு பிரிந்தனைகொ லெம்மிரக்கங் கேட்டிலைகொ
　　லின்சொ லாள
வொவ்வாது நினதுசெய லொருமொழியு மெமக்குரையா
　　யோடிப் போதல்
செவ்வாக யாவரே கொள்கிற்பார் சேடகிரிச்
　　செம்ம லேயோ! (௩)

ஆரியமாக் கடல்கடைந்திட் டாரமிழ்த மளித்தவெழி
　　லண்ண லேயோ
சீரியசெந் தமிழ்க்கடலிற் குளித்துமுத்த நல்கியவெஞ்
　　செல்வ னேயோ

பாரியலு மாந்திரத்தின் மணமனைத்துங் கொண்டுலவு
பவன னேயோ
வேரியபன் மலர்களெனு மொழிகளெலா மேற்கொண்ட
வேந்த னேயோ! (௪)

மேற்படி—வேறு.

பழிநூ றுலகர் பகர்ந்தாலும்
பாராட் டாமன் மேற்கொண்ட
வழியே சென்று கொள்கைகளின்
வாய்மை கண்டு மகிழ்ந்தவற்றை
யெழுதா வெழுத்தி னிட்டெவரு
மேற்கு மாறு செய்தவனே
மொழிநூல் வகுத்தாய் நின்செலவு
முறையோ முறையோ முறையேயோ! (௫)

உண்மை தவறு வுத்தமனே
யொழுக்க நலஞ்சான் றுயர்ந்தவனே
தண்மை செறிந்த வருட்கடலே
தன்னை யடுத்தார் தமக்கரணே
வண்மை கனிந்த கற்பகமே
மயக்க விருளை நீத்தவென்றே
நுண்மை மிகுந்த வறிவுடையாய்
நுவலா யெங்ஙு னொளித்தனைகொல்? (௬)

தரவுகொச்சகக்கலிப்பா.

ஏழிசைக்கு மிருப்பிடமே யெம்மொழியு முணர்ந்தவனே
யாழிசைத்தல் வல்லவனே யாவருக்கு நல்லவனே
யாழிபுடை சூழுலகை யானந்த வுலகுசெய்தாய்
பாழென்ன நீயிறந்திப் பார்தோன்றச் செய்ததெவன்? ()

துணிவிழந்த மதியென்னச் சுவையிழந்த கூத்தென்ன
வுணர்விழந்த வுடலென்ன வொளியிழந்த விழியென்ன
மணியிழந்த பணியென்ன மணமிழந்த மலரென்ன
வணியிழந்த மகளென்ன வருஞ்சென்னை தோன்றுமரோ!

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பற்பல பாடை யுள்ளும் பரிவுட னுழைந்தா ராய்ந்து
சொற்பொருட் கார ணங்க டெளறத் தோன்று மாறு
செற்பமும் விதண்டை தானுஞ் சேராது தெளிவி னோடுங்
கற்பவர் களிகூர்ந் தென்றுங் கருதிடச் செய்த கோவே!

மன்றினில் வாண னார்த மலரடி புகுந்தா யேனு
நுன்றிற னறிவு தூய்மை நுவலரு செஞ்சொ றேர்ந்தோ
குன்றனை மறத்த லுண்டோ வுயர்வினு முயர்ந்த வண்ண
னன்றெலா முருக்கொள் சேட கிரியெனு நங்கோ மானே!



# IV.

## கடற்கரையுலா.



[தற்காப்பு முறையென்னுஞ் சுபாவநியாயத்தை வலி யுறுத்துரைப்பான் கருதித் தாம் 1900 - ஆம் வருஷப் பாடியது.]

# கடற்கரையுலா.

## கலிவிருத்தம்.

சொல்வளர் தமிழ்கமழ் தொண்டை நாட்டினி
னல்வளச் சென்னைமா நகர்க்க டற்கரை
வல்வெயின் மிக்கதோர் மாலைப் போழ்தத்தென்
செல்வியும் யானுமாச் சென்று சேர்ந்தனம். (க)

ஆவயிற் றண்புன லருகி னேகினே
மேவிய தளர்வொடு வியர்வு நீங்கினே
மோவலி லலைகளு மொலித்து மேல்வர
மாவிரை வொடுமெழீஇ மருங்கொ துங்கினேம். (உ)

ஒதுங்கிய பினர்ச்சிறி துற்று நோக்கினே
மதங்கிளர் திரைகளின் வன்பு கண்டியாங்
கதங்கொள வின்றியுட் களிப்ப டைந்துபல்
விதங்குதி கொளுங்கடல் வியந்து நின்றனெம். (ங)

நின்றயா மிருவெமு நேர்ந்து லாவிய
சென்றனஞ் செல்வுழிச் சிறிய ஞெண்டுக
ளொன்றிய தண்மணு லுழுது வந்தன
மன்றவே யதுகண்டு மறைந்து றைந்தனெம். (ச)

இற்றைஞான் றைப்பல விளைஞ ரோவிங்ஙன்
கற்றன வெழுதுபு கருத்திற் போற்றுறு
நற்றெழி லலவனை நணிநி கர்க்குந
ருற்றவென் றலைவிர்நீ ருரைத்தி ரென்றனள். (ரு)

என்னலு மற்றன்றெ னினிய மாதராய்
நன்னயக் கடவிறை ஞண்டென் கைகளாற்
றன்னில மகளெனுந் தலைவி மேனியி
லின்னெழிற் றெய்யினன் கெழுது கின்றனன். (௬)

எனவிள நகைபுரிந் தியானி யம்பலுந்
தனதழ கியமுகந் தையல் சேர்ந்தன
ளெனதொரு வினவினை யிகழ்ந்து நின்றனி
ரெனைகொலோ வொளித்தலின் றிசையி னென்னவே. (

கூறிய வளவினிற் குறிப்பி யானென்றும்
வேறுறக் கொண்டிலேன் விளங்கு புந்தியாய்
சிறிகின் முகநிறந் திறம்பு கிறபதென்
றேறிய வறிகிலேன் றெருட்டு கிற்றியோ? (௮)

நீபிரே ரிகழ்ந்துபு நின்ற செய்தியை
யாயுழி யதனினின் றூழ்க ருத்தொன்று
மேயதும் முளத்தென விளம்பு தற்கினி
தேயதோர் காரண மியம்பல் வேண்டுமோ? (௯)

எனிந்த வீண்மொழி யென்னை நும்முளந்
தேனுந்து மின்றமிழ்ச் செய்ய பாவலீர்
ஞானந்த வாதவஞ் ஞண்டின் பாங்கர்ச்சென்
றூனந்த மெய்துவ மன்பின் வம்மினே. (௧௦)

என்றென்றன் காதலி யிட்ட வாணையை
நன்றென மேற்கொடு நண்ண லும்மவ
ளின்றநுண் டனைத்துமே நினைப்பி னும்விரைஇத்
துன்றின தொளைவெளித் தோன்ற வின்றியே. (௧௧)

உதுகண்டென் மனைவியு முற்ற தென்கொலோ
ஏதுமென னெண்டெலாங் கரந்த காரணை
மீதுவெனச் சுட்டுதே வியலு மோபொருட்
புதுமையின் சுவைநலன் புகலு நாவலீர்! (௩௨)

செபலையந் தளிர்புரை சிறிய தாளெழிற்
கயல்விழி நின்முழங் கால்கள் கண்ணுறீஇ
யயலவை நிற்கவு மஞ்சி யோடின
வியல்பிது வாகவு மென்கொ னின்வினை? (௩௩)

அன்பினோ டழகுநன் கார்ந்த மங்கையே
வன்பகை யாளரை வழியிற் கண்டக்கால்
மென்பொலி வுடையர்தாம் வெருவி யோடுவ
வென்பது வையகத் தியற்கை யேயன்றோ? (௩௪)

போதும்போ துந்தமிழ்ப் புலவ ரோயினி
யோதுதற் குரியதா யுற்ற காரணை
மேதொன்று முண்டெனி லெடுத்துக் காட்டுதிர்
காதலின் மெய்ந்நிலை கண்ட வந்தணீர்! (௩௫)

இவ்வுரை யான்செவி யேற்ற பின்னரென்
செவ்விய மடந்தையே சிறிது கேட்டியா
லெவ்வகை யுயிர்களு மினிது தாந்தமைத்
தெவ்வினிற் காத்திட னேர்ந்த மெய்ம்மையே. (௩௬)

ஆதலி னவையெலா மரிய தம்முயிர்க்
கேதமே தாயினு மெய்து மோவெனப்
போர்சலுற் றனமற்றுன் புந்தி தோன்றுவ
தீதென விசைத்தியோ வெனாது தையலே! (௩௭)

விந்தையே நும்முரை வேறு தீயெனுஞ்
சிந்தையிற் கொண்டிலேன் செம்மை சான்றநற்
பைந்தமிழ் வாணரே பகர்தி ராலவை
தந்தமைக் காத்தலோ தக்க காரணம்? (௧௮)

நன்மையை நாடுறு ஞான வானையு
மன்மையை யாற்றிடு மறிவி லானையுந்
தன்மதி தனிலொப்பத் தான்கு றிக்கொளல்
புன்மைய தாமன்றிப் புலமைப் பாலதோ? (௧௯)

அத்துணை யறிவந்த வலவற் குண்டுகொன்
முத்துறழ் முறுவனின் மொழிக ளின்பொருண்
மெத்தவு மழகிது மேன்மை சான்றநங்
கத்தன்றன் படைப்பினுங் காண்டி யோகுறை? (௨௰)

இறைவனார் படைப்பினு மிருக்கு மோசில
குறையெனுங் கருத்தியான் கொண்டி லேன்மற்றெ
னறிவினிற் றோன்றிய வையப் பாட்டினம்
மறைதனைக் காணிய மனங்கொண் டேனரோ. (௨௧)

அம்மம்ம யாமுரை யாடு மவ்வயிற்
றம்மையே தாஙிகர் தன்மை யாளர்கள்
செம்மைசேர் மேனியர் சேந்த குஞ்சியர்
விம்மிய தோளினர் விளைந்த யாக்கையர். (௨௨)

மயலெனா வுயிரினை மதிக்கு மாண்பினர்
செயலருஞ் செய்கைகள் செய்ய வல்லவர்
புயலென முழங்குபு போர்செய் வீரர்க
ணயவுரை நண்ணலர் நால்வர் போந்தனர். (௨௩)

போதரக் கண்டனள் பொருக்கென் றெழுன் றையு
மோதல ளென்னிடை யோடி வந்தெனை
யாதர வொடுந்தழீஇ யயர்ந்து நின்றனன்
மூதறி வுடையவென் முதல்வி மாணவே. (உச)

பாகட்ட மென்மொழிப் பாவை யேயுற்ற
மாகட்ட மென்னைகொல் வகுத்து ரைத்திநீ
போகட்ட மலரிது புரிந்து கொள்ளென
வாகட்டு மென்றதை யன்பிற் கைக்கொண்டாள். (உரு)

என்னதா மிருப்பினு மிந்த வீரர்க
டன்னமும் பயமின்றித் தமக்குத் தோன்றிய
பன்னரு வழியெலாம் பயின்று லாவுத
லின்னல்செய் மாக்கள திழிந்த செய்தியாம். (உசா)

மடமையார் வீரர்கள் மகளிர் நம்மியல்
பொடுபயின் றவரல ருணருஞ் செவ்வியு
முடையவ ரல்லரா லுவரை நீசினந்
திடுவது சாலுமோ வினிய மஞ்ஞையே! (உஎ)

இனியிது நிற்கநா மிருவெ மும்முனர்
நனியுரை யாடிய நலத்த செய்திமீட்
டினிதின்மேற் கொள்ளுதற் கியைதி யோவென்றன்
பனிமதி முகத்தினுய் பரிந்து சொற்றியால். உஅ)

தாமெதை யோவெணித் தமவ ழிச்சென்ற
பாமரர் தமைக்கண்டு பயந்த தென்கொலாங்
காமர்பூந் தலைவிதற் காப்பெ னச்சொலு
மாமுறை யல்லது மற்றென் சாற்றுவாய்? (உகூ)

நங்கையர் மணியென நவிலு நன்மையாய்
தங்குமிவ் வுலகினிற் றயங்கு யிர்ப்பொரு
டங்கட்காத் திடலவை தமவி யற்கையென்
றங்குநின் செயல்களா லுணர்ந்து கொண்டியோ? (௬௰)

ஒக்குமொக் கும்மும துரையெ னுமகிழ்ந்
தக்கொள்கை யேயுற வமைந்த தாமன்றித்
தக்கது வேறிலே சரத மென்றனள்
புக்கது தண்மதி புகழ்கொண் டோங்கியே. (௬௧)

அப்புறம் யாங்களு மன்பி னுடினெந்
தப்புறழ் வாயின ரேய பாடல்க
டிப்பியக் குரலினிற் சிறிது பாடின
னுப்பங்காற் கடற்கரை யுலாவிப் போந்தனெம். (௬௨)



## V.

## தாமரைத்தடம்.



[இயற்கைவனப்பின்கண் ஈடுபட்டுக் களிபேருவகை பூத்த தாம் அதனைப் பிறர்க்கும் வலியுறுத்துரைப்பான் கருதி 1900-ஆம் வருஷம் பாடியது.]

# தாமரைத்தடம்.

தரவுகொச்சகக்கலிப்பா.

பொன்மயிலுஞ் சொன்மயிலும் போத மகிழ்சிறந்து
புன்மையின்றி நாளும் பொருந்தி விளையாடு
நன்மையுறு பாண்டிவள நாட்டின் றலைநகராம்
வன்மைநனி பெற்றவெழின் மாமதுரை யம்பதிக்கண். (

வையைக் கரையில் வளர்ந்தோங்கி வானுலவு
மையைத் தமகிளையான் வன்பிற் றளைப்பவவை
கையைப் பிசைந்து கலுழ்ந்துகண்ணீர் காலவிட்டுச்
செய்யிற் பயிர்வளர்க்குஞ் சீரார் தடங்காவில். (௨

மன்னுமொரு செந்தா மரைத்தடத்திற் சென்றுட
னன்ன மொருவொன்றை நாளந்திக் காலையினிற்
றன்னந் தனியேயான் சார்ந்தேனு வென்பின்ன
மென்னை யறியாம லென்னினிய வில்லாளும். (௩

போந்து மறைந்துநின்றாள் பொய்கைக் கரைசென்று
சேர்ந்து கடவுளையான் சிந்தித் திருப்புழிக்கொம்
பார்ந்து பறவையெலா மன்பி னிசைகூட்டி
யேய்ந்து பரிதி யெழல்கண்டு கொண்டாடி (௪

நின்றனவப் போழ்தத்து நீரின் முளைத்தெழுந்து
துன்றியசெந் தாமரையின் றூயநறும் போதனைத்து
மென்றாழ் வரல்கண் டினிதி னலர்ந்தனயான்
மன்ற விழிவிருந்து வாய்த்த தெனமகிழ்ந்தேன். (௫

தண்ணீ ரருகிற் றனிச்சென்றேன் றாமரையி
னுண்ணீர்மை கண்டே னுளத்துவகை கொண்டேன்றங்
கண்ணீர் வடித்தவவை கண்ணுற்ற யானுமின்பக்
கண்ணீர் வடித்தேன் களிகூர்ந்து நின்றேனால். (௬)

என்னே யியற்கைநல மென்னே யிறைமகிமை
யென்னேயென் னேயென்ன வின்பக்கூத் தாடினேன்
கொன்னே யிராதுகரங் கூப்பித் துதித்தேன்யான்
றன்னேரி லாத தனிக்கருணை வள்ளலையே. (௭)

கூடிவாழ் வோரே குறையா வலியினர்மற்
றோடிவில கிட்டா ருறுவ துறுகணென்றே
நாடி யறியா நமரங்க ளோவன்றோ
நீடுடைய தாமரைகாள் பெட்பி னொருங்குறைவீர்? (௮)

நும்மியல்பு கண்டு நுனித்துணர்கி லார்பலரே
யிம்மையே யிவ்வுலகை யின்பவுல காக்குகிற்பீ
ரம்மம்ம நுந்த மறிவுடைமை யென்னென்கோ
தம்மின் மலர்கா டமியேற் கொருமுத்தம். (௯)

என்றுசொல்லி முத்த மிடுதலுமென் றன்பின்னர்
நின்றமனை யாள்யா னினையாத வண்ணமின்னே
யொன்றியவிவ் வின்ப மொழியுமெனச் சொல்வாள்போ
லென்றன் விழியை யிமைப்பொழுதி லேபுதைத்தாள். ( )

ஈதுணர்ந்த யானுமென்ற னின்னுயிர்நற் காதலியே
போதும் விடுதியெனப் பூவொன்று நீர்கொய்தென்
மீதுள்ள காதலுக்கு வேண்டு மறிகுறியாப்
பேதையேற் கீயிலொன்றும் பேசேன் விடுவலென்றாள்.

நன்றுநன்று நின்றன்மொழி யென்று நகையாடி
யென்றன் கருத்திஃ தெனயா னவிலுமுனந்
தன்றன்விருப் பிற்குத் தடையொன்றுஞ் சொல்லாம
னன்றுநன் றென்றேனு நாடி விடுத்துநின்றாள். (௪௨)

தங்கா ளியற்கையெனு நல்லா ளழகெல்லா
நங்கண்ணுற் கண்டு நனிநுகரத் தக்கனகாண்
பொங்கு மனத்துவகை பூத்தின்ப மெய்தாது
தங்கு மவளழகைத் தான்குறைத்த னேரிதுகொல்? (௪௩)

மக்களெலாங் கண்டே மகிழுறுதல் வேண்டுமென்று
தக்க கடவுளார் தாம்படைத்தா ரஃதுணரா
யிக்குமொழிக் காரிகையே யென்றனுமன் றெழுந்து
துக்க முறுமியற்கை தூய குணமுடையாள். (௪௪)

தன்னுடைய மக்களெலாந் தன்பக்கற் போந்துமிகத்
தன்னுடலைப் பற்றியுறத் தாவிமேல் வீழ்ந்திழுத்துத்
தன்னை மிதித்தாலுந் தாய்களிப்புக் கொள்ளலன்றி
யென்னையனு காதீ ரெனச்சீற்றங் கொள்வாளோ? (௪௫)

வாய்பொதிந்த செப்பினிடம் வைகுமலர் போலாது
பாய்புனலு ணின்று பலருந்தன் பால்வந்து
தாய்போற் கருதியவர் தாந்தாம் விரும்பியன
வாய்புகொள வேண்டியன்றோ வன்றெண் முகமலர்தல்?

ஆற்றன்றேற் கேண்மினென தன்புடையீர் நாமுண்ண
லுற்ற பொருள்களெலா முண்ணு தொழிந்திடுவா
நற்றண் புனலினிநாம் நம்வாய் பருகலமே
சற்றுமசை யாதியற்கை தன்னழகு கண்டிருப்பாம். ()

இவ்வாறு வாதித் தெனதின் னுயிர்த்துணைவி
யொவ்வா துமதுரைமற் றுந்தோல்விக் கீடாக
வெவ்வேளை யோடிச்சென் றெற்கினிய பூவொன்று
செவ்வே கொணர்மினெனச் செப்பினா ளப்படியே. (கஅ)

மலரொன்று கொண்டு வரநீரு ணீந்தி
யலகின் றலர்ந்த வலர்தம்மு னன்ன
ரிலகுற்று நின்ற வியல்வண்டு வீழா
நலன்மேவு பூக்கொய்து நானோடி வந்தேனால். (க௯)

வந்தென் றலைவியினை வாயார வாழ்த்தியெழி
னந்தாத தாமரையி னொண்மலரை யான்மகிழ்ந்து
தந்தே னவள்கரத்திற் றையலுமஃ தேற்றினிய
மந்தநகை செய்து மலர்ந்தாண் முகக்கமலம். (உ0)

தங்க ளினத்தாரைத் தாங்களே கண்டக்காற்
பொங்கு மனத்திற் புரிந்தன்பு பாராட்டி
யங்கே யுபசரித்த லன்னார் வழக்கன்றோ
விங்கெனுளக் கஞ்ச மினிது மலர்ந்ததே. (உக)

அப்போதென் னாருயிர்க்கொம் பன்னா ளெனைநோக்கி
யிப்போது காண்மினோ விப்போதை யென்னனாநின்
கைப்போதுந் தாமரைகாண் கட்போதுந் தாமரைகா
ணெப்போதுந் தண்முகமு மொண்டொடியே தாமரை
[காண்.

போதாக் குறைக்குநின்றாட் போதுகளுந் தாமரைகா
ணாதலா னம்மலரு மன்பினழ கோங்கியதான்
மாதேநின் கைப்பரிச மாண்புறுகண் ணோக்குமுந்தம்
மீதே படப்பெற்றால் வீறாவோ வெப்பொருளும்? (உ௩)

என்ன வுரைசெய் தெளியேனு மம்மலரை
யின்ன றவிர்க்கு மெழிற்பொருளே யென்றுமுத்தந்
துன்னி யிடுதலுமென் றோகைமுகங் கோட்டினு
ளென்னினுமிப்போதுநுமக்கோர்மிக்குத்தோன்றுங்கொல்?

இந்தவுரை யென்செவியி லெய்து மளவினிலே
சந்த வடிவுடைய தையாலித் தாமரைநின்
னிந்து முகத்தி னிடுமுத்தந் தானளிக்குஞ்
சிந்தைகொளின் பத்திற் சிறிதேனு மீயவற்றோ? (உரு)

என்றறிவான் வேண்டியா னிட்டே னொருமுத்த
மன்றியுமச் செந்தா மரையி னலர்தானு
நின்றன்கைப் பங்கயத்தி னோர்ந்தழகு மிக்கொளிர்பு
நின்றதனைக்கண்டேனானின் மலச்செம்பொன்னனையாய்!

உண்மை யெனிலிவ் வுரைதானிப் பூந்தடத்திற்
றண்மை மிகுந்திலங்கு தாமரையின் போதொன்றை
யண்மியிவண் யானிலெனென் றுனந்த மாய்வளைத்து
முண்மகிழ்ந்து நீர்தா மொருமுத்த மிட்டதென்னே? ()

தாது முகுத்துத் தலையவிழ்ந்து தேன்றுளிக்கும்
போதுகண்ட வென்மனந்தான் பொன்னே யுனதெழில்
சீத மலர்முகங்கண் சிந்தித்து நிற்பவெற்குக் [கொள்
காதன் மிகுந்ததனாற் கண்ணேயான் முத்தமிட்டேன். ()

பூவிற் கணிகலமோ பொங்குறுசெந் தேனுகும்
பாவிற் கணிகலமோ பண்கொண்ட கற்பனைபூங்
காவிற் கணிகலமோ கஞ்சமலர் வாவியென்ற
னாவிக் கணிகலநீ யன்றோவென் னாரணங்கே? (உகு)

காய்புறழ்பைந் தோளுடைய காதலியு மென்மீது
தோம்புனைந்து சொல்லுதற்குந் தோன்றும விஃதுரைத்தா
டாம்புரிந்த வெச்செயற்குந் தக்கவா காரணங்க
டாம்படைத்துக் கூற றமிழ்வாணர் தம்மியல்பாம். (௯௦)

இதுநிற்க யானோ ரெழின்மலர்கொய் பாக்குக்
கதுவென்ன வொன்றுங் கருதாது நீரிற்
புதுமலரி னுப்பட் புகுந்துழியென் னுளி [ன்கொல்?
லதன்கொடிசுற் றிக்கொண்டா லன்னோவென் போக்கெ

நீயிதனைச் சற்று நினையா தொருமலர்க்காப்
போயதனைக் கொண்டு புகவெற் பணித்தமையை
யாயும் பொழுதி னதுதா னெவர்தமையு
மேயேநி னுள்ளமிரும் பென்றெண்ணச் செய்யுமரோ. ()

செந்தா மரைக்கொடியாள் சீர்க்கற் புடையளவள்
கந்தமலர் கொய்வான் கடுகிவரு வோரையவர்
தந்தாள் செறித்திடா டானே விலகிநிற்பா
ளந்தோ நுமது மொழி யம்ம வதிசயமே! (௯௩)

அல்லதவ டன்பாலோ ரன்னியனென் காதலனைச் [ளேற்
சொல்லலளோர் காரணமுஞ் சுற்றிவைத்துக் கொள்வா
கொல்லும் வினையாள் கொடியா ளெனும்பெயர்தா
னொல்லுமே யொல்லுமந்த வூறு விளைப்பாட்கே. (௯௪)

காரணமொன் றில்லாதக் கன்னிப் பசுங்கொடியா
ளோரணங்கே யெண்ணே விருப்பாளென் றன்னுட்கியா
னோரணங்கு செய்கிற்பா னுற்றேனு லஃதொன்றே
சீரணவு காரணமாஞ் சிந்தித்துக் காண்மாதோ. (௯௫)

விள்ளரிய தம்முயிர்க்கே வீதல் வருமேனு
முள்ளற்க வொன்ற னுயிர்நீத்த லென்றுதிரு
வள்ளுவனார் வாய்மலர்ந்த வண்மைத் திருக்குறளும்
முள்ளத்தி னின்று மொழிந்ததுகொ லொண்புலவீர்? (௫௬)

நீவிர் மறப்பினுமந் நீள்கொடியா டான்மறவாள்
பாவலரே யென்று பரிகசித்தா ளென்னையென்றன்
பாவையனை யாள்யானத் தாமரைப்பூம் பைங்கொடிக்கு
மேவரிய நல்லறிவு முண்டோ விளங்கிழையாய்? (௫௭)

எனா வினவி நிற்க வெனாது தலைவி
தனாதுமேற் கோளைவலி தானுறுத்தல் வேண்டி
யுனாது சொலப்புகுந்தீ ரொக்குமுந்தம் வாத [றாள்.
மனாதிகளுக் கெட்டாதும் வான்றருக்க வண்மையென்

வாளா விகழ்ந்தாலும் வன்மைபெறா துன்வாதம்
வாளார் விழிவெருட்டல் வைதலிவை யாவுமுன்கோ
ளாக்குந் தோல்விநிலை சூழ்ந்தறிதி மங்கையர்தஞ்
சூளா மணியாகத் தோன்று மடவனமே! (௫௯)

நிற்பீர் சிறிது நியாயநூல் வல்லீர்நுஞ்
சொற்படியப் பைங்கொடிக்குத் துன்ப மிகவுநம்மா
லுற்பவித்து மன்னா னமக்கொன்றுஞ் செய்யாமை
வற்புறுத்து மன்றோவென் வாதத் தினைப்புகலீர்? (௬௦)

என்னோ வொருபொழுதி லென்னதுமுன் றன்னதுமா
முன்னல் வினைதுணையா முட்டுப்பா டில்லேனா
நுன்னருகர்ப் போந்ததன்றி நோக்குமிடத் துன்மேற்கோ
ளென்னணமோ வன்மைபெற லெற்கியம்பு வாய்மயிலே?

மேலொன்றுஞ்சொல்லாள் வெருண்டாடன் மெய்வியர்த்
வேலொன்று கண்ணாள் விதனமீக் கூர்ந்தவளோர் [தாள்
பாலொன்றி நின்றாள் பனிமுகம்வா டக்கண்டேன்
பாலொன்று மின்மொழியாய் பைவரளீ யெய்தியதென்?

கூறாயெ னின்சொற் குயிலே யெனதுமன
மாறாதிப் போழ்தே யறிவுறுத்து வாயென்னை
வேறாகக் கொள்ளாய் விளம்பா யெனவுரைத்தோ
ராறேனுங் காணே னவட்டழீஇ முத்தமிட்டேன். (சங)

இட்டேன் முகமலர்ந்தா ளென்மீது தன்கரம்வேய்ந்
துட்டேன் றுளித்தெழல்போ லுற்றவிழி நீர்பெய்தாண்
மட்டீறுஞ் செங்குமுத வாய்மலர்ந்து பாடினாள்
விட்டா டனதுடன் மின்னே ரிடையாளே. (சச)

ஏமமிக வெய்தினேன் யானு மிவைகாணூஉத்
தேமலர்க்கஞ் சக்கிழவன் செம்பரிதி விண்ணிவர்ந்தான்
காமருசெந்தேமொழியென் கைப்பிடித்துக்கோடலும்யாந்
தாமரைப்பூம் பொய்கைவிட்டுச் சார்ந்தோ மெமதிலமே.
(சரு)



## VI.

## கலங்கரை விளக்கம்.



[சென்னைமாநகரின்கண் உயர் நீதிசாலையின்மீது நின்று சுழன்றொளிரும் விளக்கத்தை நோக்குந்தோறுந் தம்மனத்தின்க ணுதித்த சில கருத்துக்களை யமைத்து அரச விசுவாசந்தோன்ற 1900—ஆம் வருஷம் பாடியது.]

# கலங்கரை விளக்கம்.

## கலிவிருத்தம்.

ஓது செல்வமிக் கோங்கிய சென்னையி
னீதி சாலை நிமிர்தரு சேட்சிமை
மீது நின்று மிளிர்ந்திருள் போழுபு
சோதி யொன்று சுழன்றொளிர் கின்றதால். (௧)

அளக்க ரிற்செல வார்ந்துவங் கம்மெலாந்
துளக்க முற்றுத் துயரடை யாவணம்
மளக்க ரும்புக ழாளர் கலங்கரை
விளக்க மென்னவொன் றிட்டனர் மேலைநாள். (௨)

அன்ன வெண்ணங்கொண் டாக்கின ரேனுமஃ
தின்ன மும்பல வின்பய னல்குபு
மன்னு கிற்றன் மதிக்கு மெமதுள
முன்னி யுன்னி யுவகை சிறக்குமால். (௩)

உலக மாந்தர்க் கொளியே யுயர்ந்ததென்
றிலகு முண்மை யினிது விளக்குபு
மலைக வின்றுயர் மாடத்து மீமிசைப்
பலக திர்த்திரள் பண்பிற் பரப்புமே. (௪)

ஆக்க மோங்கு மாங்கில மன்னவர்
தாக்கு தம்பிர தாபம் பகையிருள்
போக்கு தற்குப் பொருந்து மறிகுறி
யாக்கொள் கிற்ப தமைவுடைத் தேயரோ. (௫)

# பாவலர் விருந்து.

மன்ற மேடையு வாய்மொழி கூறுநர்
நின்று தங்கொள்கை நேர்ந்து நிற்குந
ரொன்று மெய்ம்மை புணரா வினைபுந
ரென்றின் றோர்கட்கு மேன்மை மக்கட்கும்.

ஈரவு செய்பவிர் கட்டிளை கூறுமி
னொருவன் றேவ னுளன்கண்டீ ரென்றுதன்
சிரதி வந்துயர் செவ்விய கோலெனும்
விரவிற் கட்டி விளம்புதன் மானுமே.

மக்கட் கின்னுரை மாண்பின் வழங்குந
ரொக்க யாரு மொருங்குறக் கேட்டற்குத்
தக்க தோருயர் தானத்தின் மேலெழீஇத்
தொக்க தங்கைகள் சொல்லுழி நீட்டல்போல்.

வன்பு மாக்கள் வழிப்பட் டுழலுபு
துன்புற் றுரைத் துயர்களை நீத்திதா
யின்ப மீகுவ லென்வயிற் போதுதி
ரென்ப வட்போன் றிருங்கதிர் வீசுமால்.

கடமை யிற்பிறழ் கல்லார் பொதுளிவிண்
டடவு மாடத் தலைக்கண் விளக்கந்தான்
படமெ டுத்துயர் பாந்த ளரையன்றன்
சுடிகை மேவுஞ் சுடர்மணி போலுமே.

உம்பர் நோக்கி யொளிசெய்து சுற்றிவந்
திம்ப ரிவ்விளக் கெங்கணு மின்னலா
னம்ப னந்த ஈறுந்தமிழ் வேட்டவ
னெம்பி ரான்சடை யென்றலு மொக்குமே.

சுற்றி நின்று சுடர்க்கற்றை வீசலா
னுற்று நோக்குந ருள்ள மலர்த்தலான்
மற்றி ராப்பொழு தத்தின் வயங்கலான்
வெற்றி வேணியன் மேலொளிர் திங்களோ? (௪௨)

ஓரும் போழ்தினி துவ்விளக் கம்புடை
சாரும் பற்பஃ றணிமலை தானடுத்
தேரி யன்றுய ரின்னலஞ் சான்றபொன்
மேரு மாமலை மேலொளி ரீசனோ? (௪௩)

எண்ணு மிந்நக ரேயிவ் விளக்கமே
கண்ணெரி மாந்தரைக் காக்குங் கறைமிடற்
றண்ண லார்த மருள்கெழு மாவலக்
கண்ணெ ஞுவிது கண்டிளம் பொங்குமால். (௪௪)

இங்கி ருக்குமெ மின்றமிழ்ப் பாவலர்
தங்க ளுக்குத் தழைத்துவந் தெம்முள
மிங்கி தத்தி னெழுந்து குதித்துறப்
பொங்கு மாறு புகலுதற் பாலதே. (௪௫)

வென்றி மாப்படை வீரர் புரந்திட
னன்றிவ் வாங்கில ராச்சிய ஞாலத்தி
னென்று மென்றூழ் மறைகுத லில்லையா
மென்று கூற வியையு மியையுமே. (௪௬)

## VII.

## ஆசானுருநிலை.



[தமக்கு ஆங்கிலநூற் போதகாசிரியரும், தாம் தலைமைத் தமிழ்ப்புலமை நடாத்தும் கிறிஸ்தவ கலாசாலைத் தலைவருமாகிய கனம்பொருந்திய வில்லியம் மில்லர் துரையவர்களது சிலை நாட்டியபோழ்தத்துப் பாடியது.]

# ஆசானுருநிலை.

கலிவிருத்தம்.

குருவெனச் சென்னையிற் கூடி னானுக்கெந்
திருநலஞ் சான்றொளிர் செய்ய மாணிக்க
வருபணி யனையவ னாகு மில்லருட்
குருநிலை யெடுத்தன ருவத்தி நெஞ்சமே.

ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை

உண்மைவழி காட்டியுல குய்விக்க வந்தவனை
யண்மினா ருள்ளத்தி லன்பு விதைப்பவனைப்
பண்மலர யாமாடிப் பாடுகம்வா நெஞ்சே!

மாணாக்க ரென்னும் வளர்கொடிக ளெஞ்ஞான்றும்
பூணாக் கறிவுமலர் பூப்பவெழு மாதவனைப்
பாணாற் பரிந்தாடிப் பாடுகம்வா நெஞ்சே!

மெல்லியலார் தம்வலையில் வீழாக் குருமணியை
வில்லிய மில்லரெனும் வித்தகனை யாம்புகழ்ந்து
பல்லிய மார்த்தாடிப் பாடுகம்வா நெஞ்சே!

கலிவிருத்தம்.

அண்ட ரும்புக ழாசிரி யன்னெழில்
கொண்ட மேனி குறித்திவண் வெண்கலத்
தெண்ட வாவுரு வேய்ந்திசை கிற்பது
கண்டு நெஞ்சங் களிக்கட லாடுமால்.

கலிநிலைத்துறை.

துணிந்த கேள்வியுங் கல்வியுஞ் சூழ்ச்சியு முடையார்
பணிந்தி ருப்பரென் றடிக்கடி பகர்ந்தசொற் காட்டாத்
தணிந்தி ராதுமா ணாக்கரிற் றரையுறத் தாழ்ந்து
தணிந்தி ருந்தனை போலுமாங் கிலைத்திரு சானே! (ச

நீதி சாலையுங் கலைபயில் சாலையு மிரலே
பேத மின்றுபின் முன்னராப் பிறங்கநின் னிலைதா
னோத லாவநூல் கற்றபிற் றாயரா யொழுகி
யாத ரத்தினீர் நீதிகைக் கொண்மினென் றறையும். (௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விளைகலை நலங்க ளோங்கி மேதக வுடைமை யாகி
மிளிர்தரு முனக்கு மேலோர் மிக்கதம் முவகைக் கேற்ற
வெளியறி குறியாச் செய்த வெண்கலச் சிலையை மாந்த
ரொளிநிலை யென்னார் நின்ற வுருநிலை யென்ற லென்னே!

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகிய லனைத்து மொருங்குணர் தருநீ
யுதக்கினை நோக்குபு நிற்ற
லலைகட னடுவ ணசைந்துசெல் கலங்க
ளருந்துய ரகன்றுநற் றுறைக்க
ணிலைபெறச் செலுத்தும் வடக்குநோக் குறுமோர்
நிகரறு கருவியைப் போல
வலகிலிவ் வாழ்வி னுருயி ரினிதி
னடைநெறி காட்டிடு மன்றே. (எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நின்னடிக்கீ ழிருந்தபல மாணுக்கர் தமதுளத்தி
னினக்கு நேர்ந்த
பொன்னியன்ற சிலையினுமே லானதொரு கருவிகரப்
புரிவி லாது
நன்னரொளி மல்குதனிச் சிலையெடுத்து நாட்டினார்
நாமு நந்தம்
பன்னரிய தமிழ்மொழியி லுன்னுருவம் புனைதந்து
பாடி னேமால். (அ)

வஞ்சிவிருத்தம்.

எங்கண் மில்ல ரிசையொடுந்
தங்கி வாழ்க தரைமிசைப்
பொங்கி யோகை பொலிகவே
யெங்கு மின்ப மியைகவே.

# VIII.

## பட்டினக் காட்சி.



[சென்னைத் துறைமுகக் காட்சியைப் புனையுமுகத்தாற் பழவினை முறையையும் ஊழ்க்கோளையும்பற்றி ஆராய்ந்து அவற்றின்கட் பொதிந்துள மாசு கழீஇத் தன்வயவிழைவு முறையை வலியுறுத்தி நகைமொழிநிலை தோன்றப் பாடியது.]

# பட்டினக் காட்சி.

## கலிநிலைத்துறை.

மன்னு தொல்புகழ்த் தமிழ்மக ணடமிடும் வளஞ்சால்
சென்னை மாநகர்க் கடற்கரைப் பட்டினஞ் சென்று
நன்னர்க் காணிய நின்றன னாலுமெற் கினிய
பன்ன ரும்பல நூல்களிற் பயின்றமா ணவனும். (க)

பொங்கு மாக்கட லிறைதிரைக் கையின்முத்தம் பொலி
வெங்க ணுந்தன நீர்த்துளி யினிமையின் வீசச் [ய
சங்கு லாங்கரைக் கண்வளி சாமரை யிரட்டத்
தங்கி னேமவண் யாங்களுந் தருமகிழ் சிறந்தே. (உ)

வெள்ளைக் காரர்கள் பற்பலர் மிக்கவுல் லாசக்
கள்ள ருந்திய படைஞர்கள் கவினுற வுலவ
வெள்ளி னும்பிற ரதைச்சிறி தேனுமெண் ணுகிலாக்
கொள்ளி வாய்ப்புகைச் சுருட்டினர் சிலரவட் குழும; )

அன்னந் தாமென வருநட மஞ்ஞைக ளென்னப்
பன்னும் பாவல ருவமைகள் பாரினிற் றமையே
துன்னு மென்றுதம் மேனியின் றோற்றநற் பொலிவாற்
சொன்ன வாங்கில மாதர்க ளாயிடைத் துறும; (௩)

வெண்ணி றத்தினின் மிளிர்தரு மேனியு முடையு
நண்ணு கிற்றலாற் கல்வியி னலங்களா னினிய
பண்ண வின்னிசைப் பாட்டினுற் பரிவுடை மையினுற்
பெண்ணெனன் பெற்றியாற் கலைமக ளாரெனப் பிறங்க; )

ஆர்த்தி ரம்பையில் வார்களோ டரியமையந் தமிழ
ரேந்து கன்னடம் பேசுந ரெவற்றையு மூக்காற்
சேர்ந்தி சைத்திடு மீமிசைச் சிகைமலை யாளர்
போந்து தாந்தனித் தனிக்குழாங் கூடுபு புகுத; (௬)

தூண்டிற் கையினர் வலைஞர்கள் வீசுபு தோன்ற
நீண்ட தாடியர் குஞ்சியிற் சிரத்தினர் நெருங்க [ண்
வேண்டு மெய்யெலாந் தொளைசெய்து பலவணி மேற்கொ
டாண்டுப் பன்னிறத் தரிவைய ரகமுவந் தடைய; (௭)

வேலைக் காரர்கள் கலஞ்சென்று மீளவல் விருப்புப்
பாலத் தோவிலாப் பண்டிகள் பற்பல போத
ஞாலத் தாருயிர் யாவையு நனிமகிழ் தருமம்
மாலைக் காலமின் புறம்படி வயங்கிய தன்றே. (௮)

அந்த வேளையி லாழ்கட லகத்தொரு நாவாய்
வந்து கொண்டிருந் ததனைப்பன் மாந்தர்கள் கண்ணுற
றுந்து முண்மகிழ் வொடுமவ னுரைநயந் துலவித்
தந்த நண்பர்க டம்மொடுங் குலாய்க்களி தந்தார். (௯)

நவிலு மப்புகைக் கலனுநம் பட்டின நண்ணக்
கவினு றப்பொலிந் தனர்சில காரிகை மார்கள்
சவிபெ றீஇத்திகழ் தந்தசின் மடந்தையர் முகங்க
ளுவகை பொங்கின முவைகண்ட யாங்களு முடனே. ( )

போந்த கப்பலு நின்றது புரிந்துபல் படவு
மாந்த ரேற்றியும் வண்பொரு ளேற்றியு மாண்பிற்
சூழ்ந்து லாவுபு வருதல்காண் டோகைய ரெழிலி
யார்த்து வானுறக் கண்ணுறு மணிமயி லானார். (௧௧)

யாண்டு நோக்கினு மின்பொளிர் முகங்களே கண்டேம்
பூண்டு நன்மகிழ் பூத்தனம் யாங்களும் புகழ்ந்தேங்
காண்டற் கெட்டருங் கடவுளார் படைப்பினுட் கருத்து
மேண்டவாவின் பயமேகொலோ வெனவெண்ணினோமால்.

மக்கள் யாவரு மகிழ்தல் கருதியே மகிமை
தொக்க பேரருட் கடவுளார் கடலினைச் சூழ்ந்து
தக்க தோரின்பப் பெருந்தனிக் கருவியாத் தந்தா
ரிக்க ருத்தினை யுணர்கிலா ரென்னொலோ வழிதல்? (கஙு)

என்ற வென்மொழி கேட்டவென் னினியமா ணவனு
நன்று நன்றமீ தேயென நயந்தன னம்ம
தன்ற னின்மனத் தினுமிந்தத் தனிக்கருத் துதித்த[தான்.
தென்றிவ் வுண்மையோர் பாவினி லிசைப்பலென்றுரைத்

ஒருவிகற்பநேரிசைவெண்பா.

"ஓவாது நீமகிழ்க வுற்றுணர்ந்து மாகடலே
யாவா வநேக ரருந்துயர்க்கா—ளாவாரா
தேவாதி தேவன் றிருமுறையின் பண்பறியார்
சாவார்பார் தீதென்று தாம்." (கரு)

கலிநிலைத்துறை.

இவ்வெண் பாவென செவித்துணை யெய்தலு மினிய
செவ்வி வாய்ந்தநல் லமிழ்தெனச் சிறந்துளங் களிப்ப
வவ்வி டத்தொரு கலம்புறத் தகன்றிடக் கண்ட
நவ்வி நேர்விழி மாதரார் நலந்தொலைந் தழுதார். (கசு)

அழுத வக்குரல் கேட்டனம் பதைத்தன மந்தோ
வெழுது மோவிய மெனுமிந்த மகளிர்க ளினைதல்
பழுது மற்றிதன் காரணம் யாதெனப் பரிந்து
முழுது முய்த்துநோக் குழிச்சில முதுமொழி மாக்கள் ;()

றுந்த மாருயிர்த் தலைவர்க ளுமையிவண் விடுத்துத்
தந்த நற்றொழி றலைக்கொண்டு புகைக்கலஞ் சார்ந்தா
ரிந்தத் தீமையே மிக்கதோ ரியல்புடை யுலகி
னிந்து வாணுத லீரிது நுந்தலை யெழுத்தே; (கஅ)

அம்ம னையலி ராருளம் பதைக்கலி ரயீர்
நம்ம முற்பவத் தீவினை நமைவந்து நலியு
மிம்மை யாஞ்செயு மெச்செயல் களுமதன் பயனே
செம்மை மாதரீர் சிந்தையிற் றெளிமினோ வென்றார். ( )

உரைத்த வாசகங் கேட்டலு மொய்யென யானுஞ்
சிரித்து நின்றனெ னதுகண்ட மாணவன் றெளியான்
றிருத்த முற்றிலா னென்னைகொ லிவர்மொழி செறிந்த
கருத்து மென்கொலோ கட்டுரை மின்னெனக் கழற; ( )

ஐய மாணவ யான்சொல லன்பினிற் கேண்மோ
செய்ய வாருயிர்ச் செயலெலாஞ் செய்வினைப் பயனே
லுய்யு மாறிலை யுய்த்துணர் வாயிதை மைந்த
மையல் கொண்டிநீ மயங்கலை வாய்மையை யறிதி. (உக)

ஈது நல்லது மற்றது தீயதா மென்ன
யாதை யாயினுங் கேள்வியின் மட்டுநீ யியம்பே
லீது மெய்யன்றே லெழுதிவை யாரென வெண்ணே
லாதி தொட்டிஃ தைதிக மாமென நம்பேல். (உஉ)

உலகிற் பற்பலர் நம்பலா னுண்மையென் னுணரே
விலகு மோருவ மானத்தி னதையுமேற் கொள்ளே
லலகின் றுய்விரித் ததிசய மாய்விளங் கிடலா
னலதெ னுவதை நம்பலை நயந்தறி குதியால். (உங)

மெய்ம்மை யாளன்சொன் மென்மையாற் பொய்யெனத்
தோன்றப் [போலு
பொய்ம்மை யாளன்சொல் வன்மையான் மெய்ம்மையே
மெம்மொ ழிக்கணும் யாவர்தங் கூற்றையு மினிது
தம்ம னத்தினிற் றகவுற வாய்குநர் தக்கோர். (உ௪)

ஆத லானென தன்புடை மாணவ வன்று
ரோதி னூரென வுண்மையை யுணர்தலின் றுரையே[ருளோ
லேதை யெவ்வெவ ரியம்பினு மதன்கண்மெய்ப் பொ
ருதி நுத்தமாக் காண்டலே நேரென நினைத்தி. (உ௫)

அன்னர் சொற்படி யாருயிர்ச் செயலெலா மந்த
முன்னை யெய்வினைத் தொகுதியின் பயனென மூளு
மென்ன யாங்கொளி னெய்துறு பிழைகளு மிவையாற்
றன்னு மந்தமுற் பவவினை யதற்குமுன் றொடரும். ()

அதுவு மந்தமுற் பிறப்புக்கு முற்பிறப் பவாவு
மதன்க ணூருயி ரகப்படு மெனிலதற் குய்வெவ்
விதத்தி னுகுமோ வொருமுறை தவறுபு விளங்கா
மதிம யக்கினன் வீழ்ந்தபின் வாழ்வதற் குண்டோ? ()

இப்பி றப்பினில் யாஞ்செயும் வினைகளின் பயனே
பிற்பி றப்பினி னூநல்ல வழியினிற் பெயர்ந்து
தப்பி யுய்பவொட் டாதுநந் தமசெய றகைக்கு
மப்பி றப்புறு செயல்களு மன்னவா மதன்பின்; (உ௮)

தீய செய்தன தீயவே செய்குபு செலுமா
லாய வவ்வழி விடுத்தவை யயற்புறத் தகலா
மேய நற்செயல் செய்தன மேலவை விரும்பு
மேய விவ்வழி விடுத்திவை யெங்கணு மியங்கா. (உ௯)

வினையெ னுஞ்சுழற் பட்டவா ருயிரெலா மீட்டு
நினைவு நல்லன மேவியச் சுழலினி னீங்கித்
துணைவின் மேதக வெய்துவான் கருதிய தொல்லோர்
புனைவி னல்கிய நீதிநூல் யாவையும் பொருந்தா. (௯௰)

மக்க டம்பழ வினைகளின் பயனென வந்து
புக்க குற்றத்தின் பொருட்டந்த மக்களைப் புடைத்த
லெக்க ருத்தினு னேரிதா மியம்புதி யொறுத்த
லக்க தன்றெனி லுலகினிற் றகைமையு மின்றாம். (௯௧)

தரவுகொச்சகக்கலிப்பா.

ஆற்றேற் பழவினைக ளவ்வவ் வுயிர்களைத்தாம்
பற்றுவோ கூறுமினிப் பாருலகி னெங்குருவே
யெற்றேனு மிவ்வுண்மை யானறிதல் வேட்டேனாற்
கற்றோர்தங் கோவே கனிவாய் மலர்கவென்றான். (௯௨)

கலிநிலைத்துறை.

தொல்லைச் செய்வினை யாவையு நமைவந்து தொடரும்
வல்லை யென்பது வாய்மையே மற்றவை நந்தம்
வல்ல நம்மனந் தமைத்தம வழிகளிற் றிருப்ப
லொல்லு மென்பது போலிவா சகமென வுணர்தி. (௯௩)

இன்ன நாட்டினி லின்னவூ ரினிலின்ன பெயரி
னின்னர் தாய்தந்தை மார்களு மின்னர்சோ தரரு
மின்ன ளில்லறக் கிழத்தியு மாவின்ன குலத்தி
லின்ன வாழ்க்கையி லிருக்கெனப் பழவினை யிருத்தும்.

அன்றி நம்மனத் துதித்திடுங் கருத்தினை யந்தத்
துன்று செய்வினை மாற்றுவ வல்லவென் றாய
நன்றி யேயொரு வடிவென நண்ணுமா ணவனே
யென்று கூறலு மிளநகை யரும்பினன் மாதோ. (௯௫)

ஊள்ள நூற்புல வோர்களு முரைத்தன ரிதையே
மெள்ள மெள்ளவெப் பொருள்வந்து மயக்கினும் வியந்த
வுள்ள மப்பொருள் விழைதலும் விடுத்தலு முரைத்த
லுள்ளு மாருயிர்ச் செயலென வுணர்தியென் மைந்தா.()

ஆயிர்க்கும் புந்தியி னடைந்தவிவ் வையுற வகற்றி
மயக்க நீங்குதி வாய்மையி னொளிதவ மேவி
யுயிர்க்குத் தன்வய விழைவுள தெனவுண்மை யுதனாற்
செயிர்க்கு மக்களை யொறுத்திடல் செவ்விதா மன்றே. ()

மனிதன் வேட்கையிற் றன்வயம் வாய்ந்தவ னதனு
னினிய நற்செய லின்னவென் றறிந்தவை புரியி
னனிசி றந்தவ னயப்புக ழுடையனும் பொல்லாத்
துனிய தீச்செய லுஞற்றிடிற் றுயாமுற் றிழிவான். (௫௮)

இச்சொற் கேட்டவென் மாணவ னின்பமா ருளத்த
னிச்சை கொண்டெழுந் தாடின னென்றனை வணங்கி
மெய்ச்சி நின்றனன் வியந்தனன் மெய்ப்பொருள் பெற்றே
னச்ச மற்றைய மகன்றனெ னையனே யென்றான். (௫௯)

தரவுகொச்சகக்கலிப்பா.

இத்துணையி லிதுநிற்க வெற்கிசைந்த மாணவனே
முத்தமிகக் கொழித்தொலிக்கு முந்நீரைக் காணுதியாற்
சித்தமிசை மகிழ்சிறந்த சிறியமகா ரனைவோடிப்
பத்தியொடுந் துதிபாடும் பரமனடி யார்போலும். (௬௰)

பட்டினத்தி னுள்ளிருக்கும் பனிநீரெல் லாபடக்கப்
பட்டிருக்கத் தண்கடலிற் பாவுநீ ரலைதருயாற்
கட்டுசிறைக் கோட்டமுளார் கையற்று நிற்பமற்றே
ரொட்டுதுயரொன்றுமின்றியோ டியெங்குந்திரிவான்றே?

ஆழ்ந்தகருத் தாளரெலா மடக்கமுடை யோராவர்
தாழ்ந்திருந்தார் தமக்கொன்றுந் தாழ்விலையா மாறுகிறீஇச்
சூழ்ந்துவளை மதிலுடைய துறைமுகத்துட் புனன்முழுது
மோய்ந்தொடுங்கி நிற்பதனை யுற்றுணர்தி மாணவனே. ()

உடல்சிறிய ராயிடினு முள்ளடங்கி ஞோர்தமையே
விடுதலின்றி நாஞளுநே மேவியணு குவர்மாந்தர்
கடல்வெளியி னில்லாது கலங்களெலா முட்புகுந்து
படர்வெளிய பட்டினத்தின் பாலடைந்து தங்குவவால்.

கலிவிருத்தம்.

பூவொடு சேர்ந்து பொருந்திய பிணைநார்
மேவிடும் வாசம் விரும்புறும் விதமாப்
பாவிய வாரி பயின்றலை புனலுந்
தூவிய லார்ந்து துறைத்தலை யமையும். (சச)

தரவுகொச்சகக்கலிப்பா.

நல்லோரை நண்ணினரு நல்லோரே யாவதுபோ [போ
லெல்லோரைச் சேர்ந்தபொரு ளெல்லினொளி யெய்வது
னில்லாது பேரொலிசெய் நீள்கடலி னீர்துறைபோய்ச்
செல்லாது தானமையுஞ் சீர்காண்டி மாணவனே. (சரு)

சென்னைமக ளருள்கூர்ந்து செவ்விமுக மலர்ந்தொளிரத்
தன்னிரண்டு கைகளையுந் தாய்குழவி யணைப்பதுபோன்
முன்னிரையுங் கடனோக்கி மொய்த்துவருந் திரைவிலக்கி
நன்னர்வளைக் குபுகலங்க ணயந்தணைத்தல் காணுதியால்.

வஞ்சிவிருத்தம்.

என்றன் மாணவ னேரிரு
டென்று கின்றது தோமிலீர்
சென்று சேர்குவம் வம்மினோ
வென்றி யம்பலு மேகினேம். (சஎ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விண்ணகத்து நின்றுமிளிர் மீன்கணத்தி னொளியானும்
விளங்கு நாவாய்க்
கண்ணிருக்கும் பலவிளக்கத் தொளியானும் பட்டினத்
கடந்து சென்னை [தைக்
நண்ணுதெருக் கடைகுறுகு மளவிலெமை யவணிறுவி
நடுக்க பாடங் [சகடங்
கண்ணில்கடு மொழியனடைத் தரைமணிமேற் புகைச்
கடுகிற் றம்மா. (சஅ)

கலிவிருத்தம்.

அவ்வண மருங்கத வடைத்து நின்றவர்
செவ்விய கட்குடிச் செருக்கு வாய்ந்தவர்
கௌவிய விதழினர் கடைதி றந்தன
ரவ்வழி யவரரு ளடைந்து போந்தனம். (சகூ)

# IX.

## மதுரைமாநகர்.



[*தாய்மொழியாகிய தமிழினை மறந்து செல்வப்பொருளீட்டலிலேயே காலம்போக்கி யுழலும் மதுரையாகிய தாம் பிறந்த நகர்க்கிரங்கி யாறுறுது பாடியது.*]

# மதுரைமாநகர்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

உலக மெங்கு மிலகு நகர்பல
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயரத்
தால்மாத் திரையின் வான்மீத் திரியும்
வளமழை பொய்த்து விளைபொருள் குன்றி
மயங்குறு காலை வயங்குமேற் றிசையோர் (௫)
மகிதலத் தின்கட் பகீரதன் போலப்
பேரியா றதனை மாரியு நாணிமெய்
விளர்ப்ப வையையோ டளவக் கூட்டி
விளைவெலா மலியுமா விரும்பிச் செயவொளிர்
மதுரைமா நகரே! மதுரைமா நகரே! (௧0)
செல்வப் பொருளே சிறப்புடைப் பொருளென
வொல்வகை யுண்மை யுணர்கிலை கொண்டனை.
அதனை யாக்கும் விதமறிந் தவற்றிற்
றலைப்பட் டுழலுந் தனிப்பெரு நகரே!
நிலைப்பட் டிருக்கு நீர்மையெய் தினையோ? (௧௫)
நினைக்குறித் தந்தோ நினைக்குந் தோறுந்
துன்ப மிகுந்து சோரு மென்னுளம்!
இன்பமீ தூரு மெவர்க்குந் தாந்தாம்
பிறந்த நகரெனில்; பேசிய விந்நிலை
யென்னிட மாறிய தென்னைகொல்? அறியேன். (௨0)
நின்னிற் பிரிந்து நெடுங்கலை கற்பேன்
சென்னை போந்துஞ் சிறியனே னுள்ளம்
பன்னாள் சென்றும் பரிந்து நிற்காண்
வேட்கை மேவி விரைந்தாண்டு தோறு

மிருமதி நின்வயி னிருந்தேன். அம்ம! நீ (உரு)
யுயர்நிலை தவறி நயமெலாந் தொலைந்து
வீழ்நிலை யுற்றனை! மேதக்க மதுராய்!
எவன்கொலோ இவ்வா றவநிலை யெய்தினை?
நச்சிப் பாண்டியர் மெய்ச்சி வளர்த்த
சங்க மிருந்து பொங்கிய நன்னகர் (ஙO)
மதுரையென் றன்றோர் வகுத்துக் கூறிய
தெதிர்மறை யிலக்கணை யென்பது பற்றியோ?
வஞ்சப் புகழ்ச்சியோ? மற்றெனோ? அறியேன்.
நஞ்செனக் கருதியோ நற்றமி ழமுதைப்
பேதைமை கந்தா மாதுய ருறுவாய் (ஙரு)
பருகலை யதன்சுவைக் குருகலை யிருத்தி?
மறையெலாம் புகழு மிறையனா ரென்று
நறுந்தமிழ்ப் புலவர் சிறந்துவீற் றிருந்த
வளநக ராகிய மதுரையு நீகொலோ?
ஆல வாயி னவிர்சடைக் கடவுளை (சO)
யேலவா தித்த வின்றமிழ்க் கீரன்
வந்தவ தரித்த மதுரையு நீகொலோ?
தமிழ்மண மிகுந்து கமழு நாடெலா
முள்ள பாவல ருள்ளிநின் பெருமையைத்
தந்தம நூல்களை விந்தை யரங்கினி (சரு)
லேற்றி நூற்பொருள் சாற்றல் வேண்டியு
மரசர்பாற் பற்பல பரிசு கருதியுங்
காடெலாங் கடந்து நாடொறும் போந்து
முதுதமிழ் கொழித்த மதுரையு நீகொலோ?
பதினெண் கூலமு மிதன்க ணுளவெனச் (ருO)
சாற்றுவார் போலச் சாத்தனா ரென்று
மேற்றகைப் புலவர் வேட்டினி திருந்து

மதுரநூல் யாத்த மதுரையு நீகொலோ?
நால்வர் குரவரு மேல்வகைத் தமிழிற்
பண்ணிசைப் பாட்டிற் பரிந்து புகழ்ந்த (ருரு)
மண்ணில்விண் ணகமெனு மதுரையு நீகொலோ?
அமிழ்தினு மினிய தமிழி னின்சுவை
புணர்ந்தநீர் வையை மணந்த பாண்டியன்
பதியென வயங்கிய மதுரையு நீகொலோ?
வல்லாள ரேத்துங் கல்லாடர் தாஞ்செய் (சுo)
கல்லாட மென்னுங் கனித்தமிழ் நூலுட்
சொல்லாயுஞ் சங்கத் தொல்பெரு நகரென
வெல்லாருங் கொள்வா னின்னிசை யகவற்
பாத்தொறு மூரைத்துப் பரிவுடன் புகழ்ந்த
மதிகுல வேந்தர்த மதுரையு நீகொலோ? (சுரு)
செந்தமிழ்ப் பாற்கடற் புந்திமத் தாற்கடைந்
துட்பொரு ளாகிய தட்பநல் லமுதை
யுரையெனத் தந்த நரைமூ தாள
ரந்தண் குலத்தின் விந்தையிற் றோன்றி
யன்னார்ப் பற்றிய வின்னாப் பழமொழி (எo)
போலி யுரையெனச் சால விளக்கிய
வுச்சிமேற் புலவர்கொ ணச்சினார்க் கினியர்
மாண்புட னிருந்த மதுரையு நீகொலோ?
புலத்தமிழ் தோற்ற போலி மதுராய்!
நலத்தெரி வில்லாய்! நாணிலை போலும். (எரு)
அன்றோ வென்றன் மெய்ந்நடுங் குறுமால்!
அஞ்ஞான்றை யுயர்வென்! இஞ்ஞான்றை யிழிவென்!
மனைவிசொற் கேட்டுத் தனையீன் றெடுத்த
தாயினைப் பசியிற் றீய விடுக்கும்
பதகனை யொத்த மதுரைமா நகரே! (அo)

பொருத்தமின் முரணிருள் போக்கியெங் குஞ்சீர்
திருத்தமென் பரிதி திகழ்ந்து தோன்றியும்
பயிலுந் தமிழ்த்தாய் வெயிலுறத் தள்ளித்
துயிலுகின் றனையோ? தொல்சீர் மதுராய்!
நன்றி யறிவிலாய்! குன்றிய சிந்தையாய்! (அரு)
குறையே நயமெனக் கொண்டு பிதற்றுவோய்!
உன்வயிற் பிறந்தேன் யானென வுரைக்கவும்
வெள்கினேன்! அந்தோ! வெள்கினேன்!! அந்தோ!!
இன்னணம் வெள்குவோ ரின்னு மெத்துணைப்
பெயரோ? அறியேன். மயலார் மதுராய்! (கூ0)
அழிநிலை யடையா தெழுதி; துயிலுத
லொழிதி; தமிழ்நிலை விழிகொடு காண்டி;
அவளிசைத் தேறல் செவிவாய்ப் பருகுதி;
நந்தலி லின்பஞ் சிந்தையிற் பெறுதி.
என்றே சொற்றே னென்ன வெண்ணலை. (கூரு)
அருந்தமிழ்த் தாயின் றிருந்திய வன்பினுற்
சிறியனே னித்துணை நெறியெனக் கூறினேன்.
என்னை வெகுளலை; என்னன் பதனை
வேண்டு மெனினீ வெகுள்க; மற்றுச்
'சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்திடல் (
நல்வினை கோறலின் வேறன்' றென்ன
வுரைத்த புலவனு முளனால். தமரே
யெனினு மவர்பிழை யினிதெடுத் துரைத்தல்
கடனே யன்றே? கழறுய். அன்றியு
நின்பா லெனக்குள வன்பால் யானுரை (க0ரு)
செய்த விதனைநீ நொய்தெனக் கருதி
வாளா காலம் போக்கலை. மதுராய்!
மீளாய் தமிழ்நலம் விரும்பியுய் வாயென.

# X.

## போலியாராய்ச்சியன்.



[நூலாராய்ச்சியென்பது நூலிற் குற்றங் கூறுதலே யென்று பொருள் கொண்டும், மெய்யான குற்றங்களைக் காண்டலின்றிப் போலிக்குறை கூறிக்கொண்டும், நூலின் நயங்கண்டு நுகர்தலின்றி நவைகாண்டலே தொழிலெனக்கொண்டும், வாளா திரிதரும் ஒருவனைச் சுட்டிப் பாடியது.]

# போலியாராய்ச்சியன்.

## கலிவிருத்தம்.

நூலை யுள்ளபடி யாய்வலெனு நொய்யமகனே
போலி யாயபல தோமுரைசெய் புன்மைநெறியாய்
சீல முள்ளபுல வோர்மனதின் செவ்வியுணராய்
வேலை யொத்தநின வீண்மொழி விடுத்தியொழிதி. (௧)

பாந்த ளேயிறிது பாந்தளின பாதமுணரும்
வாய்ந்த மாதறி மகாருமை வந்தியுணரா
ளாய்ந்த செய்யுணல மான்றகவி வாணரறிவா
ரேய்ந்த நூறுணரு மோர்விழிய வெங்ஙனறிவாய்? (௨)

மதுர மிக்கொழுகு மாங்கனி வடித்தசுவையார்
முதுத மிழ்க்கவியை முற்றுணர்கி லாதுபிசிதத்
துதித ருங்கனியை யொத்ததுறை யோருமுறையாற்
கொதிகணொன்றுறுநெடுங்கொடிநிகர்ப்பைகொடியோய்!

களிந றைக்கினிய வைப்புறழ் கவீசன்மனமிக்
கொளிப டைத்துமறு வின்றுதெளி வுற்றுலவுமா
றொளிப ளிங்கனைய தெள்ளறலி னூறலெனவான்
வளியெ னக்குலவு வான்கணொளி மானுமெனவே. (௩)

கண்ணி லாதுழல் கசட்டறிவி னையனுகலை
யெண்ணு மிவ்விட மெலாமினிய தூய்மையுடைய
வுண்ணி லாமலெழு தந்ததுகொ லுன்றனகைதான்
மண்ணி லிவ்விடையின் வாரலை மயங்குபொறியாய்! ( )

தூய நீர்மலர்க டோறுநனி பெய்துவருவேன்
மாயு மம்மலர்கண் மாகொடியை நுன்றனகையா
லேயு நின்விழியி லெய்துறு மிறப்புமிகவும்
வீயு மூச்சினுறு வெய்யபனி மேவியவையே. (௬

மன்னி வானளவு காந்தமலை மாகமுறுமா
மின்னு மேகமடை விற்குமுறி வீழ்மழையினு
மன்ன ரோடைபல நாற்புறம் விடுத்தபரிசே
யென்ன வான்புலவ ரின்னுள மெழுந்தொளிருமால்.

நீயி ருக்குமிட நிற்றியெனி னேசநிலவு
மாயி ருஞ்சினை படைத்தபொழில் வந்திசைசெயுஞ்
சேய வின்குயில்கள் பாடுதல் செவித்தொளையுறாய்
பாய பூம்பொழிலி னுப்பணவை பாடியெழுமால். (அ)

கிட்டி வந்ததையெனி லம்மவவை கேயமினையக்
கெட்ட ழிந்துவிடு மாவினிசை கேட்டுமகிழன்
மட்டு மஃதறிவி னிற்குறுதல் வாய்வதிலையா
னட்டு நல்லறிவு நாளுநுமை நண்ணுகிலதே! (௯)

# XI.

## ஓர் ஐயப்பாடு.



[தாம் திருக்குறள் நாலடியாராதி நீதிநூல்களிற் கூறிய உலக நிலையாமையைப்பற்றிச் சிந்தித்துழித் தமக்கு நிகழ்ந்ததோர் ஐயப்பாட்டினை யமைத்துப் பாடியது.]

## ஓர் ஐயப்பாடு.

நிலைமண்டிலவாசிரியப்பா.

கட்புல னில்லா விட்புலத் தோர்க்குர
னேரிய பெற்றிப் பேரறி வாளற்
குலகமு மதன்க ணிலகுந யாவையு
நிலையுந வல்லவோர் நிகழ்கண மேனு
மென்று முழங்கலுந் துன்றியோ ரிரப்போன் (௫
சோறுசோ றின்றேற் பாறிப் படுவெனு
லென்றுக் கூயின னிதுகேட் டறிஞனு
மன்றே வுணவுண் டவனிவண் வாழ்தலும்
யானவற் கின்னுண விடுதலு மாகிய
விவற்றுற் பயனெனை யெய்திய வுலகு (௧௦
மதன்க ணார்பொரு ளனைத்து மறுகணத்
தழியு மேலென வையமுற் றனனே.

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

## க. மணியசிவனார் கலிவெண்பா.



## உ. அவயவ வழிக்கை.



## ௩. கையறுநிலை.

## ச. கடற்கரையுலா.

## ரு. தாமரைத்தடம்.



## சு. கலங்கரை விளக்கம்.

## ௭. ஆசானுருநிலை.



## ௮. பட்டினக் காட்சி.

## கூ. மதுரைமாநகர்.



## கo. போலியாராய்ச்சியன்.



## கக. ஓர் ஐயப்பாடு.

# தமிழ்மகன் மேகலை.

☞ இந்நூற்றொகைப் பதிப்பாசிரியர் சென்னைக் கிறிஸ்தவகலா சாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.**

## கிங்கிணி: க.—நாடகவியல்.

[**இது நாடகத் தமிழிலக்கண நூல்;** நாடகவமைதியை நன்கு விளக்கி இனிமை தோன்றக் கூறுவது; தமிழ் மொழியின்மீது ஆர்வமுடையார் யாவர்க்கும் இன்றியமையாதது; மிகவும் புதுமையாக அமைக்கப்பட்டுளது; 272 சூத்திரங்களினியன்றது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது; நல்ல பளபளப்புள்ள கடிதத்தில் அச்சிடப்பட்டுளது; 1903-ஆம் வருஷத்துப் பி. ஏ. பரீட்சைக்குப் பாடமாயேற்பட்டுளது; விலை: அணா. 0—8—0. கலிகோகட்டட முளதாயின் அணா. 0—12—0. தபாற்கூலி வேறு.]

## கிங்கிணி: உ.—தனிப்பாசுரத்தொகை. முதற்பகுதி.

[இது 41 தனிப்பாசுரங்களடங்கியதோர் **உறுதிநூல்;** அருமையும் பெருமையும் வாய்ந்த பல பொருள்களையெடுத்துரைப்பது; மாணாக்கர் யாவர்க்கும் பெரிதும் பயன்படத்தக்கது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றிப் **பரிதிமாற்கலைஞன்** என்னும் புனைவு பெயரில் வெளியிட்டது; கனம்பொருந்திய **ஜி. யூ. போப்பையரவர்களான்** ஆங்கில பாஷையினுஞ் செய்யுளாக மொழிபெயர்க்கப்பட்டுளது; உயர்ந்த பளபளப்புள்ள கடிதத்திலச்சிடப்பட்டுளது; **விலை:** அணா. 0—4—0. கலிகோ கட்டட முளதாயின் அணா. 0—8—0. ஆங்கில மொழிபெயர்ப்புடன் கொண்டது ரூ. 1—0—0. தபாற்கூலி வேறு.]

கிங்கிணி: ௩.—பாவலர் விருந்து. முதனூள்.

[இஃது இனிமையும் புதுமையும் வாய்ந்த பதினொரு சிறிய செய்யுணூல்கள் கொண்டது; ஆங்காங்குச் சில புதிய கருத்துக்கள் அடங்கியது; வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ., இயற்றியது; விலை: அணா. 0—8—0. கலிகோ கட்டட முளதாயின் அணா. 0—12—0. தபாற்கூலி வேறு.]

கிங்கிணி: ௪.—தாமரை நாண்மலர்.

[இஃது இனிமைவாய்ந்த சிறிய செய்யுணூல்கள் ஆறு கொண்டது; யாவர்க்கும் பயன்படத்தக்கது; ந. பலராமையர் இயற்றியது; விலை: அணா. 0–6–0. கலிகோ கட்டடமுளதாயின் அணா. 0–10–0. தபாற்கூலி வேறு.]

கிங்கிணி: ௫.—புட்பபாண விலாசம்.

[இது வடமொழியினின்றுந் தமிழில் மொழிபெயர்த்ததோர் செய்யுணூல்; உவகைச்சுவை பெரிதும் உற்றது; அகப்பொருட் கருத்தமைந்தது; சநுக்கை-இராமசாமி ஐயங்கார், பி. ஏ., இயற்றியது; விலை: அணா. 0—2—0. தபாற்கூலி வேறு.]

கிங்கிணி: ௬.—மேன்மொழித்தரளம்.

[இஃது ஆங்கில மொழியினின்றுந் தமிழில் மொழிபெயர்த்த பல செய்யுணூல்கள் கொண்டது; இனிய கருத்துக்களடங்கியது; சநுக்கை-இராமசாமி ஐயங்கார், பி. ஏ., இயற்றியது; விலை: அணா. 0—4—0. தபாற்கூலி வேறு.]

S. P. C. K. Press, Vepery, Madras—1901.